உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 6 | இரௌத்திரி ௵ ஐப்பசி ௴ ௧௳<br>1920 ௵ அக்டோபர் ௴ 17௳ | பகுதி 4 |

## கடவுள் வணக்கம்.

ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேத மான
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூ லையும் வகுத்துச்
சைவமுத லாவளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்த மோன
சமரசம் வகுத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வகுக்க விலையோ
பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்ய ரறிவிற்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்ற பொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

---

பேசா வனுபூ தியையடியேன் பெற்றுப் பிழைக்கப் பேரருளால்
தேசோ மயந்தந் தினியொருகால் சித்தத் திருளுந் தீர்ப்பாயோ
பாசா டவியைக் கடந்தவன்பர் பற்று மகண்டப் பரப்பான
ஈசா பொதுவி னடமாடு மிறைவா குறையா வின்னமுதே.

இன்பக் கடலிற் புகுந்திடுவா னிரவும் பகலுந் தோற்றும
லன்பிற் கரைந்து கரைந்துருகி யண்ணா வரசே யெனக்கூவிப்
பின்புற் றழுஞ்சே யெனவிழிநீர் பெருக்கிப் பெருக்கிப் பித்தாகித்
துன்பக் கடல்விட் டகல்வேனோ சொரூபா னந்த சுடர்க்கொழுந்தே.

# ஆனந்தபோதினி

இரௌத்திரி ௵ ஐப்பசி ௴ ௧௨

## நமது பெருங் குறை.

நண்பர்களே! இப்போது நம் தாய் நாட்டிற்குள்ள குறைகள் பலவெனினும், நாம் இவண் முறையிடக் கருதியது நம் தெய்வீகத் தாய் மொழியாகிய தமிழின் தற்கால நிலைமையைப் பற்றியே யாகும். இது அவ்வளவு அவசியமாகக் கருதத் தகுந்ததோ வெனின், அதற்குச் சற்றும் ஐயமின்றாம்.

நம் தாய்ப்பாஷை இப்போதிருக்கும் நிலைமையினின்று காப்பாற்றப்படாவிடின், இதனால் நேரிடக்கூடிய ஆபத்து சற்று ஆலசியமாக நேரிடுமாதலால், இதைக் கவனிக்கவேண்டியது அவ்வளவு அவசரமானதாகத் தோன்றவில்லைபோலும். அந்தோ நமக்கிருக்கும் இக்குறை, ஒருவர் தேகத்தின்கண் அவர்கள் உணராவண்ணம் அற்ப அங்குரமென்னத் தோன்றி மறைவிலேயே வளர்ந்து தேகத்தில் நன்றாய்ப் பற்றிக்கொண்டு, பிறகு எத்தகைய சிகிச்சைக்கும் அடங்காது, உண்ணும் ஔஷதங்களை யெல்லாம் தான் விழுங்கி விட்டு, நிச்சயமாய்க் கொல்லும் இயல்புடைய ஒரு கொடிய வியாதியை யொத்ததேயாகும். சற்று சிந்தித்துப் பார்த்தால் இதனாலுண்டாகும் ஆபத்து மிக்க பயங்கரமானதென்றும், மிக்க கஷ்டப்பட்டு நாம் பெறத்தக்க மற்ற பயன்களை யெல்லாம் இது அழித்துவிடத் தக்கதென்றும், பிறகு சுலபத்தில் நீக்கிக்கொள்ளக் கூடியதல்லவென்பதும் 'உள்ளங்கை நெல்லிக்கனிப்போல்' அனைவோர்க்கும் விளங்கும் என்பது உண்மை. ஒரு பொருள் நமக்கு எத்துணை அவசியமானதென்பதையும், இன்றியமையாததென்பதையும் உணர்ந்தால் அதன் சேதத்தால் நமக்கு நேரிடத்தக்க தீங்கின் அளவு இத்தன்மையதென்று தெள்ளெனப் புலப்படும்.

உலகிலுள்ள பல பாஷைகளில் சம்ஸ்கிருதமும், தமிழுமே வேறெந்த அன்னிய பாஷையின் உதவியுமின்றித் தாமே யாவற்றையும் விளக்கக் கூடியவை; விரிந்த இலக்கண முடையவை; பூரணத்வமுடையவை. இதே சஞ்சிகையின் மற்றோரிடத்தில்

"நம் தாய் நாட்டின் சிறப்பு" என்ற வியாசத்தில் வடமொழியில் பாண்டித்தியம் பெற்றிருந்த பாஷா தத்துவஞான நிபுணராகிய மாக்ஸ் முல்லர் என்ற பண்டிதர் சமஸ்கிருத பாஷையைப்பற்றிக் கூறியுள்ளதைக் கவனியுங்கள். அத்தனை விசேடங்களும் நம் தமிழ்ப் பாஷைக்குமுண்டு. இன்னும் தமிழினிடம் ஒரு அதிக விசேடங்கூட உளது.. அதாவது, வடமொழியைப்போல் எழுதும் பாஷையாகமட்டுமிராமல், தமிழ் பேசும் பாஷையாகவும் இருக்கிறது. இன்னும் இதன் இனிமை, தெய்வத்தன்மை முதலிய அறிய விசேடங்களைப்பற்றி மீண்டுக் கூறப்புகின் விரியுமென் றஞ்சி விடுத்தாம். மற்றோர் வியாசத்தில் அவற்றைப்பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. ஆண்டு கண்டுணர்க.

ஹிந்துக்களாகிய நமக்கு ஆன்மார்த்தபலனே விசேஷமானது. அற்பமும், அநித்தியமும், துக்கமுடையதுமாகிய இவ்வுலக போகங்கள் துச்சம் என்ற அலட்சிய உணர்ச்சி ஏறக்குறைய நம்மனைவர்க்குமேயுண்டு. மற்றயரைப் போல் இவ்வுலகில் அனுபவிக்கும் போகந்தான் சிறந்தது, அதிலும் மாதரோடு மகிழ்ந்து சுகிக்கும் இன்பமே யாவற்றினும் சிறந்தது என்று நம்மவரில் சுத்தமூடனும் கருதமாட்டான். அதில் இச்சை வைத்து அதை யனுபவிப்பவன் கூட, உள்ளத்தில் அது சிறந்ததென்கிற அபிப்பிராயம் உடையவனல்ல. அது அநித்தியம், துக்கம், இழிவானது என்று உணர்ந்தே, அதைவிட்டொழிக்க வழி தெரியாது, வினைப்பயனால் மயக்கப்பட்டவனாய் அதை யனுபவிக்கிறான்.

நண்பர்களே! இத்தகைய ஞானஉணர்ச்சியை யளிக்கும் நமது ஆன்மார்த்த நூல்களனைத்தும் மேற்கண்ட நமது இரண்டு பாஷைகளிலேதான் இருக்கின்றன. வேறு எப்பாஷையிலும் நம் ஆன்மார்த்த நூல்களின் கருத்துக்களை மனதிற்குப் புலப்படும்வண்ணம் விளக்கிக் காட்ட முடியாதென்பது யாவரு மறிந்ததோருண்மை. ஏனெனில், அவற்றிற்குத் தகுதியான மொழிகள் மற்றப் பாஷைகளில் இல்லை. அவ்வாறு அன்னிய பாஷையால் விளக்கிக்காட்ட முடியாத மொழிகள் நமது நூல்களில் எண்ணிறந்தன வுள. ஆகையால் நமக்கு அவசியமான நம் மறுமைப் பயனுக்கு நமது தாய்ப் பாஷை யின்றியமையாததாகும் என்பது நன்கு விளங்குகிறது.

முற்காலத்தில் நம் நாட்டில் மாணவர் குருகுலவாசம் செய்து குருவினிடம் தெய்வபக்தி வைத்துத் தமிழ்த் தெய்வத்தின் பூரண அருளைப்பெற்று விளங்கினர்கள் என்பதும், இக்காலத்தில் உள்ள மாணாக்கர் எவ்வாறு பயில்கின்றன ரென்பதும், கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ சி. குழந்தை வேலுப் பிள்ளையவர்கள் நமது ஆனந்தனுக்கு வரைந்தனுப்பிய கீழ்க்குறித்த இரண்டு செய்யுட்களால் நன்கு விளங்கக் காணலாம் :—

முன்னாளில் முதுகுரவர் தமைக்கண்டால்
முதல்வனுங் கடவு ளென்றே
உன்னுநின் றுளங்களித்தே யுரையென்ன
வுரைத்தவர்க ளுரைத்த வெல்லாம்
பன்னாளு மறவாமல் மனத்தகத்தே
பதித்துவைப்பர் பயில்மா ணாக்கர்
இந்நாளிற் பலமுறையு மிடித்திடித்தே
யியம்புகினுங் கேளா ரந்தோ.

பற்பலவாம் வார்த்தைகளைப் பகர்ந்திடுவர்
பராமுகமா யிருப்பர் சால
வற்பர்தமைப் போலவே யவமதிப்ப
ரயலேபோய்ப் பழிப்ப ரிந்தச்
சொற்பவறி வுடையமா ணாக்கர்திறம்
சொலநம்மா லியலாது சொல்லினல்ல
விற்பனர்க ளிவ்வீணர் தமைக்கண்டா
லுள்ளமிக வெறுப்ப ரன்றே.

அந்தோ ! இக்கால மாணவர்களுக்குத் தம் தாய்ப்பாஷையில் சிரத்தை யில்லாததால் இவர்கள் தம் தாய்ப்பாஷை ஆசிரியர்களை மதிக்காமல் அலட்சியம் செய்து தாய்ப்பாஷையில் தக்க பயிற்சி யின்றி எவ்வளவோ தீங்குகளுக் காளாகிறார்கள். தாய்ப்பாஷை யின் மூலமாய் அன்னிய பாஷையைக் கற்பது இயற்கை. இவர் களோ, தம் தாய்ப்பாஷையில் இவர்களுக்கு விளங்காத வார்த்தை களை அன்னிய பாஷாமொழிகளால் விளக்கிக் காட்டினால் உணரும் நிலைமையி லிருக்கிறார்கள். அந்தோ ! இது எத்தகைய வெட்கக்கே டான நிலைமை ! இவர்கள் வாசிக்கும் ஆங்கில பாட புத்தகத்தி லுள்ள மொழிகளுக்குத் தமிழ்ப்பிரதிபதம் இவர்களுக்குச் சரியாய்த் தெரியாது. கேட்டால் “ உபாத்தியாயர் ஆங்கிலத்திலேயே யாவும் வியாக்கியானம் பண்ணிவிடுகிறார்; தமிழில் கூறுவதில்லை ” என்கிறார் கள். இப்போது பாடசாலைகளில் நடக்கும் போதனாமுறை யெத் தகைய தீங்கு விளைவிக்கத்தக்கது என்பது இதனால் நன்கு விளங்கு கிறது. செய்யுள் வாசித்துப் பயில்வது தமிழ்க் கல்வியி னபிவிர்த் திக்கு அவசியமானதென்பது யாவருமறிந்த விஷயம். ஒரு செய் யுளிலுள்ள பதங்களைச் சபயோசிதப்படி பிரிக்கவும், பிறகு அதை வசன நடைக்குக் கொண்டு வரவும், அதிலுள்ள ஒவ்வொரு வார்த் தைக்கும் பிரதிபத முணரவும், அவற்றிலுள்ள இலக்கண சம்பந்தங் களை யுணரவும் பழகுவது கல்விப்பயிற்சிக்கு அத்தியாவசியமானது. அவ்வாறு சில செய்யுள் நூல்களை வாசித் துணர்ந்தால்தான் பிறகு எத்தகைய செய்யுளையும் வாசிக்கவும், பதங்களைப் பிரித்து வறக் குறையவேனும் பொருளறியவும் திறமையுண்டாகும். அப்போது தான் தாய்ப்பாஷையில் அவர்கள் அறிவு விசாலப்பட்டு விற்பத்தி யுண்டாகும்.

அந்தோ! இப்போது ஏற்படுத்தப்படும் பாட புத்தகங்களி லுள்ள செய்யுட்கள் ஆன்றோரது நூல்களிலிருந்து பொருக்கி யெடுக்கப்பட்டவைகளே. ஆனால் அவற்றிலுள்ள சீர் தளை முதலிய செய்யுள் அங்க இலக்ஷணங்களையெல்லா மொழித்து, மொழிகளை யெல்லாம் ஏறக்குறையப் பகாப்பதங்களாகச் சேதித்து, சீருக்குத் தக்கபடி யமைந்துள்ள இலக்கணச் சந்திகளையெல்லாம் அடியோடு பிரித்து, காற்புள்ளி, அரைப்புள்ளி, முக்காற்புள்ளி, ஆச்சரியக்குறி, வினாக்குறி முதலியவைகளை யெல்லாம் சேர்த்து அச்சியற்றி மாண வர்களுக்கு அளிக்கிறார்கள். இதனால் அவர்கள் வாசிப்பது வசன முமல்லாமல், செய்யுளுமல்லாமல் இருக்கிறது. பாடசாலைகளில் இலக்கணமே கற்பிக்கப்படுவதில்லை.

இவ்வாறு செய்யுட்களைச் செய்யுள் இலக்ஷணமே யில்லாமற் செய்து பிள்ளைகளைக் கற்கச் செய்வதால் என்ன பயன் உண்டாகு மென்று கருதப்படுகிறதோ, நமக்குப் புலப்படவில்லை. கற்றுணர்ந்த சில பெரியோரை நாம் கேட்டறிந்தமட்டில் இதனால் எவ்வித நன் மையு முண்டாவதாய்த் தெரியவில்லை. அதற்குமாறாகத் தமிழ்க் கல் வியில் அவர்கள் புத்தி வேலை செய்வதற்கே இடமில்லாமற் போகிற தென்றும், அதனால் தாய்ப்பாஷைக் கல்வியே குன்றிவிடுகிற தென் றும் ஐயமின்றி விளங்குகிறது.

அந்தோ! இவ்வாறிருந்தால நம் தாய்ப்பாஷை நாளடைவிற் குன்றிவிடுமென்பதில் ஐயமுண்டோ? இப்போதே, கல்வியில்லாப் பாமர ஜனங்களில் மாதர்கூட இடையிடையில் ஆங்கில வார்த்தை களைக் கலந்து பேசுவதைப் பிரத்தியக்ஷமாகக் காணலாம். இத் தகைய அவலட்சணமும், தம் தாய்ப்பாஷைக்கே அகௌரவத்தை யுண்டாக்குவதுமாகிய நடக்கை வேறெந்தநாட்டிலும் காணக்கிடை க்காது. இப்போதே இக்குறைகளை நீக்கித் தாய்ப் பாஷையையும் கட்டாய பாஷையாகப் பாடசாலைகளில் ஏற்படுத்தி, முன்போல் இலக்கணத்தோடு கற்பிக்க முயலாவிட்டால், தமிழ் முதலிய தாய்ப் பாஷைகளும் பேசமுடியாத பாஷைகளாய்விடுங்காலம் சீக்கிரத்தில் வந்துவிடத் தடையென்ன? பிறகு நமது மதநூல்களால் நமக் கென்ன பயன்? நமது மதம்போனால் ஹிந்துக்கள் என்ற ஒரு ஜாதியே யில்லாமற்போம். நமது தாய்நாட்டின் க்ஷேமாபிவிர்த் திக்காக மற்ற துறைகளில் அனேகம் தேசாபிமானிகள் படும்பா டெல்லாம், வேரைப்புழுக்கள் அரித்துக் கொண்டுபோகும் ஒரு விருட்சத்திற்கு மேலே ஜலம் தெளித்துக்கொண் டிருப்பதுபோ லன்றோ முடியும்!

உலகில் மேம்பா டடைந்திருக்கும் ஜாதியார் ஒவ்வொருவரும் தம் தாய்ப் பாஷையைப் பக்தியோடும், வைராக்கியத்தோடும் வளர்ப்பவர்களே என்பதும், தாய்ப்பாஷையை யலக்ஷியம் செய்யும் எச்சாதியாரும் க்ஷேமமடைவதில்லை யென்பதும், பிரத்தியக்ஷமான

உலக அனுபவம். நம் தாய்ப்பாஷையை விர்த்திசெய்யும் மார்க்கம் நம்மவர் கரங்களிலேயே யிருக்கிறது. இவர்களே இதில் சிரத்தை யின்றியிருந்தால் நம் தாய்நாடு எவ்வாறு க்ஷேமமடையும்? நமது மாணவர்கள் நம் தாய்ப்பாஷையில் சிரத்தையற் றிருப்பதையும், நமது மத நூல்களை வாசிக்கவேண்டுமென்ற பிரியமே இல்லாதவர்களாக விருப்பதையும், தெய்வ வழிபாட்டிலேயே நினைவில்லாதவர்களா யிருப்பதையும், அவற்றிற்கு மாறாக அன்னிய ஆசாரங்களைப் பின்பற்றுவதில் ஆவலுள்ளவர்களாக விருப்பதையும் கவனித்துப் பார்த்தால், கொஞ்சகாலத்திற்குள் நம் தாய்நாடு எக்கதி யடையுமென்பது மனதிற்குப் புலப்படாதுபோகாது. உத்தியோகத்திற்குத் தகுதி யளிக்கும் ஒரு பரீட்சையில் தேர்ச்சி யடைந்த மாணவன் சாதாரணமான ஒரு அறுசீர் விருத்தத்தைக்கூட வாசிக்கமுடியாத நிலைமையி லிருக்கிறனென்றால், தாய்ப்பாஷையில் இரண்டொரு வாக்கியங்கள்கூட அன்னியபாஷைக் கலப்பின்றிப் பேசமுடியாத தன்மையிலிருக்கிறனென்றால், அவன் தாய்ப்பாஷையில் மத நூல்களை வாசித்துணர்வது யாங்ஙனம்? ஆன்மார்த்த ஞானத்திற்குப் பிறப்பிடமாகிய இப்புண்ணிய பூமியிற் சனித்த நம் மக்கள் மதவுணர்ச்சியே யில்லாமல் வளர்க்கப்படுவதை விட, நம் தாய்நாட்டின் அழிவிற்கு வேறு மருந்து வேண்டுமோ? நம்மவர்கள் இனியேனும் இவ்விஷயத்தில் மனநாட்டம் வைத்து நமது தாய்ப்பாஷை குன்றாது தடுத்து, அது அபிவிர்த்தி யடைவதற்கு வேண்டிய முயற்சியை யெடுத்துக்கொள்ள வேண்டுமாய் வேண்டிக்கொள்வதோடு, அநாதி காலந்தொட்டு நம் புண்ணிய பூமியில் மெய்ஞ்ஞான விருக்ஷம்சற்றும் வாடாமல் செழித்துவளர்ந்து வரும்படி இதுகாறும் காத்துவந்த அருட்பெருஞ் சோதியாகிய கருணாகர மூர்த்தியே, நம்மவர் இனியேனும் மனந் திரும்பி நம் தாய்ப்பாஷையின் அபிவிர்த்திக்கு இடையூறாக வுள்ளவற்றை நீக்கி, நமது மக்களுக்குத் தாய்ப் பாஷாபிவிர்த்தியும், மதக்கல்விப் பயிற்சியும் உண்டாவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யச் சிரத்தை யெடுத்துக்கொள்ளுமாறு அருள்புரிய வேண்டுமாய்ப் பிரார்த்திப்போமாக.

ஓம் தத் ஸத்.

---

## நம் தாய்நாட்டின் சிறப்பு

நேயர்களே! கொஞ்சக் காலத்திற்கு முன்புவரையில் இந்தியர்க்கு ஒரு சாத்திர உணர்ச்சியும் கிடையாதென்றும், நம்முன்னோர்கள் சுத்த மூடர்களாக இருந்தார்களென்றும், ஐரோப்பியரே எல்லா ஜட சாத்திரங்களையும் கண்டு பிடித்தார்களென்றும், நம் நாட்டினரல்லாத மற்றையரிற் பெரும்பாலோர் கருதியிருந்தார்கள். சமீபகாலத்திற்கு முன்புகூட இங்கிலாந்திலுள்ள சிறுவர்களுக்கு "இந்தியா செழிப்பானநாடு, பொன் விளையும் பூமி, ஆனால் அங்கிருக்கும் ஜனங்கள் பல ஜாதிகளாகவும், பல மதத்தினர்களா

கவும் பிரிவுபட்டிருக்கிறார்கள்; கறுப்புநிறமுடையோர். அவர்களெல்லாம் விக்கிரகாராதனை செய்யும் அஞ்ஞான மதத்தினர் (Heathens) அநாகரீகர் கள். அரை அம்மணமாக விருப்பவர்கள்; மாதர்களை அடிமைகள் போலும், மிருகங்கள்போலும் நடத்துபவர்கள்; சாத்திரங்களைக் கண்டுபிடித்து அவற் றில் தேர்ச்சியடைதல் முதலிய சூக்கும அறிவு அவர்களுக்கில்லை. பொய், சூது முதலிய துர்க்குணங்களை யுடையோர்" என்று போதித்து, அவர் கள் "இந்தியர்கள் சம மரியாதைக்குப் பாத்திரமுடையவர்களல்லர்" என்று கருதும் வண்ணம் செய்வது வழக்கம். இதனாற்றான் அங்கிருந்து இங்கு ஜீவனார்த்தமாய் வருகிறவர்கள்; வந்தது முதலே இந்தியரைத் தங்களிலும் மிக்க தாழ்ந்த வகுப்பினராகக் கருதி, அலக்ஷியமாய் மரியாதை யின்றி நடத்தும் வழக்க முடையவர்க ளானார்கள். ஆளும் ஜாதியார்க்கும், ஆளப் படும் ஜாதியார்க்கும் பரஸ்பர விசுவாசம் இருக்கவேண்டியதற்கு இது இடையூறு செய்வதாகும்.

இப்போது கொஞ்சக் காலமாக இந்தியாவின் பூர்வீக நிலைமை எத்த கையதெனும் உண்மை உலகோர்க்கு நன்குவிளங்கத் தொடங்கியது. உல கின் மற்ற நாட்டினரெல்லாம் காட்டு மனிதர்களாக இருந்த அக்காலத் திற்கு முன்பிருந்தே, பாரத பூமியாகிய நம் புண்ணியத்தேயம், நாகரீகம், கல்வி, ஆன்மார்த்த சாத்திர விற்பத்தி, சகல சடசாத்திர பாண்டித்தியம், செல்வம் யாவற்றிலும் சிறப்புற்றோங்கியிருந்த தென்றும், இங்கிருந்தே மேற்கண்டவற்றில் பல மேல் நாடுகள் முதலிய அன்னிய நாடுகளுக்குச் சென்றனவென்றும், சகல சாத்திரங்களிலும் பாதகண்டமே உலகிலுள்ள மற்ற நாடுளுக்குக் குருநிலைமையி லிருக்கிறதென்றும், குரு தன்னை மறந்து காடாகாரமான சுழுத்தியி லழுந்திவிட்டதால், சீடர்கள் பலரும் தாங்களே எல்லா சாத்திரங்களையும் உற்பத்தி செய்த கிரந்த கர்த்தாக்களென்று பெருமைப் படுத்திக்கொள்ளத் தலைப்பட்டார்க ளென்றும் பகிரங்கமாகப் புலப்படத் தொடங்கியது.

நண்பர்களே! சகோதர சகோதரிகளே ! இப்போது நம் முன்னோர் பெருமையைப்பற்றி வாய்ப்பறையறைந்து பெருமை பாராட்டிக்கொள்ள வேண்டும் என்கிற நோக்கங் கொண்டல்ல நாம் இதை வரையத்தொட ங்கியது. அந்தோ! தற்சமயம் குடிக்கக்கூழிற்கும் வழியற்றஒருவன் ஓ எங் கள் பாட்டனார்க்குக் காமதேனுவேதினம் வந்து தேவபோசன மளித்துக் கொண்டிருந்தது என்று பெருமை கூறிக்கொள்வதில் என்ன பயன்?

"ஆ! நமது நாடு இத்தகைய பெருமைபொருந்திய நிலையோடு இப் பூவுலகுக்கே ஒரு மகுடம் போன்று விளங்கியதே. நம் முன்னோருடைய மகிமையாலல்லவோ அவ்வாறிருந்தது? அத்தகைய முன்னோரின் வழி வந்த நாம் 'யானை வயிற்றில் பூனைபிறந்தது' போலவும், 'சிங்கத்தின் வயிற் றில் முயற்குட்டி பிறந்தது' போலவும் நம் முன்னோர் பெருமையை யழிக் கும் நிலைமையி லிருக்கிறோமே" என்று நாணமும் துயரமுமடைந்து இனி யேனும் நாம் விழிப்படைந்து உரோஷமும், ஊக்கமும், வைராக்கியமும் கொண்டு மங்கியிருக்கும் நம் தாய் நாட்டின் சிறப்பு மறுபடி சூரியப்பிர காசம்போல் சுடர்விட்டுப் பிரகாசித்து, பூர்வீக உன்னத பதவியை மறு படி யடையும் வண்ணம் முயற்சி யெடுத்துக் கொள்ளவேண்டும் என்பத ற்கே இதை வரைகிறோம்.

நம் தாய் நாட்டிற்பிறந்து அமெரிகாவிற்குச்சென்று அங்கு சுதேசஸ்தராக அங்கீகரப்பட்டு, அங்குள்ள அயோவா சர்வகலாசாலை (University) யில் ஒரு பண்டிதராகவிருக்கும் டாக்டர் ஸுதீந்திர போஸ் அவர்கள் 1919௵ ஆகஸ்ட் ௴ 30௳ முதல் செப்டெம்பர் ௴ 14௳ வரை சிகாகோ நகரில் அமெரிகா துரைத்தனத்தின் ஆதரணைக்கீழ் கூடியிருந்த சர்வ அமெரிகா விளக்கச் சபை (All-American Exposition) யில் செய்த, "இந்தியாவிற்கு உலகம் பட்டிருக்கும் கடன்" என்ற வியாசத்தி லடங்கிய விஷயங்களில் சிலவற்றை ஈண்டுக் கூறுகிறோம்:—

இக்காலத்தில் ஜாதீய ஆசாரம், நாகரீகம், சட்டசாத்திர விற்பத்தி, புதிய சாத்திர உண்மைகளைக் கண்டுபிடிக்கும் புத்திநுட்பம், ஊக்கம் முதலிய யாவற்றிலும் சிறப்புற்று விளங்குவோர் அமெரிக்கரேயாவர். நான் ஜனித்த பூமியாகிய இந்தியா தேசம் கலைப்பயிற்சியைப் பற்றிய விஷயத்தில் அமெரிகாவிற்கு உதவி செய்த நாடுகளிலொன்றாகும். சமீபகாலத்திற்கு முன்புவரையில் இவ்வளவு நன்றாக அறிந்து அங்கீகரிக்கப்படாவிடினும், அமெரிகா, ஐரோப்பா கண்டங்களிலுள்ள கலைப்பயிற்சியின் அபிவிர்த்தி சம்பந்தமான விஷயங்களுக்கு உதவி செய்திருக்கத்தக்க மாதிரியான பரவிய நாகரீகத்தை இந்தியா உடைத்தாயிருந்ததென்பது உண்மை. உலகின் நாகரீகத்திற்கு இந்துதேசம் செய்திருக்கும் இத்தகைய உதவியை நான் இப்போது உங்களுக்கு எடுத்துரைக்க விரும்புகிறேன்:—

இந்தியா தேசம் விஸ்தீரணத்தில் அமெரிகா, ஐக்கிய மாகாணங்களில் பாதியாகும். அதன் ஜனத்தொகை 31 கோடி 50 இலட்சம். வேறு விதமாகக் கூறும் பட்சத்தில் இந்தியாவின் ஜனத்தொகை இரஷியாவின் ஜனத் தொகையில் ஐந்து பங்குடையது. இந்தியா உலகத்திலுள்ள ஜனத்தொகையில் ஐந்தில் ஒரு பாகத்தையுடையது. இந்தியாவின் ஜனங்களில் பெரும்பாலோர் ஆரியர்கள். அவர்கள் கிரேக்கர், உரோமர், ஆங்கிலவர் முதலிய ஜாதியாருக்குத் தாயாதிகளாவர்.

இந்தியா மிக்க புராதனமான நாகரீகத்தை யுடையது. புராதன உலகிலிருந்து கிடைத்திருக்கும் கிரந்தங்கள் கிரீக், லாடின், சம்ஸ்கிருதம் ஆகிய இம்மூன்று பாஷைகளி லிருந்தேயாகும்.

பட்சபாத மின்றி நடுநிலைமையினின்று நோக்கும் கல்விமான்கள் சம்ஸ்கிருத பாஷை, லாடின் பாஷையைவிட விஸ்தாரமானதென்றும், கிரீக் பாஷையைவிட மிக்க நேர்த்தியும் சுத்தமு முடையதென்றும், அவையிரண்டையும் விட மிக்க பூரணமடைந்த தென்றும் கருதுகிறார்கள். சம்ஸ்கிருத பாஷை அத்தகைய அழகு பொருந்தியதாகவும், பூரணமுடையதாகவும் அமைந்திருப்பதற்கு மிக்க பாடுபட்டெழுதிய சாஸ்திரீகமான இலக்கணமின்றி முடியாது. பத்தொன்பதாவது நூற்றாண்டில் இணையற்ற பாஷா தத்துவ நிபுணராக விருந்த (Philologist) மாக்ஸ் முல்லர் (ஆக்ஸ்போர்ட் சர்வகலாசாலையில் தலைமை சமஸ்கிருத பண்டிதரா யிருந்தவர்) என்பவர்,

"இலக்கண நூலை விஸ்தாரமாகும்படி விர்த்தி செய்தவர்கள் ஹிந்துக்களும், கிரேக்கருமே. ஆனால் உலகில் எப்போதும் தோன்றியிராத மகா பெரிய இலக்கண நூலாசிரியராகிய பாணினி என்பவருடைய மகா அற்புதமான இலக்கணத்தோடு ஒத்திட்டுப் பார்க்கும்போது, கிரேக்கர் இலக்கணத்தி லடைந்திருக்கும் விர்த்தி உண்மையாகவே அற்பம் என்று கூற வேண்டும்."

இக்காலத்திலுள்ள பாஷாதத்துவ தரங்களைப்பற்றிய நூலுக்குப் பாணினியின் சமஸ்கிருத இலக்கணமே வழிகாட்டியென்பது உண்மை. பத்தொன்பதாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் ஐரோப்பாவிற்குச் சமஸ்கிருத பாஷையிருப்பது தெரிந்தது. ஐரோப்பியக் கல்விமான்கள் சம்ஸ்கிருதத்தைக் கற்றுணர்ந்தபின்பே, ஒரு பாஷையிலுள்ள பத்தாயிரக் கணக்கான வார்த்தைகள் சொல்பத் தொகையான தாதுக்களில் (Roots) அடக்கப்படலாம் என்பதை யுணர்ந்தார்கள். இந்த விஷயம் இந்தியக் கல்விமான்களுக்குக் குறைந்தது மூவாயிர வருடங்களுக்கு முன்பே தெரியும்.

இந்தியரின் கல்விச்சிறப்பைப் பற்றிய சிறந்த அறிகுறிகளை யெல்லாம் இங்குக் கூறுவதெனின் சாத்தியமல்ல. உலகிலுள்ள ஐந்தாறு பெரிய காவியங்களைப்பற்றிக் கூறவேண்டுமாயின், இராமாயணம், மஹாபாரதம் என்ற இரண்டையும் இந்தியாவின் காவியங்களாகக் கூறலாம். இவற்றி லடங்கியுள்ள உயர்ந்தவிஷயங்க ளொருபக்கமிருக்க, அளவில் இவை பிரம் மாண்ட மானவையாக விருக்கின்றன. இராமாயணம் ஏழு பாகங்களடங்கியது, 48,000 வரிகளை (24000 சுலோகங்களை) யுடையது. மஹாபாரதம் இதனினும் பெரிது; பதினெட்டு பாகங்களை யுடையது; இரண்டு லட்சத்து இருபதினாயிரம் வரிகளையுடையது. கிரேக்க பாஷையில் ஹோமர் (Homer) செய்த சிறந்த பெரியநூலாகக்கூறப்படும் இலியட் (Ilied) என்பது 16,000 வரிகளையே யுடையது. வெர்கில் (Virgil) என்பவருடைய ஏனீட் (Aeneid) என்ற நூல் பனிரண்டு பாகங்களடங்கியது; 10,000 வரிகளையுடையது.

ஹிந்துக்களின் கணித சாஸ்திரத்தால் உகலமடைந்த பயன் முக்கியமானது. கணிதமும் (Arithmetic), தசாம்ச கணிதமும் (Decimal Number System), பீஜ கணிதமும் (Algebra) இந்தியாவினாலேயே உலகிற்கு உதவப்பட்டது. தசாம்ச கணிதத்தையும், அபாவ எண்களையும் (Purely Negative Numbers), பூஜ்ய (Zero) த்தையும் ஹிந்துக்களே கண்டு பிடித்தவர்கள். (தொடரும்)

ஓர் இந்தியன்.

---

## தமிழின் பெருமையும், அதன் தற்கால நிலைமையும்.

1. "அரிதரிது மானிட ராதலரிது

* * * * *

ஞானமுங் கல்வியும் நயத்தலரிது"

என நம் நரை மூதாட்டியார் நவின்றதை நாமறிவோம். நீர் சூழ்ந்த இவ்வுலகினிடத்து இருகண்களையொப்ப, மிக்கப் புகழுறும் மொழிகள் இரண்டே. அவைகள் யாவையெனில், வடமொழியுந் தென்மொழியுமே. இவ்விரு சொற்களும் தெய்வத்தன்மை பொருந்தி, இனிமை யுடையன

வாகி, கற்போர்க்கு நீதிகளைப் புகட்டி, அவரை நல்வழிப்படுத்தி, சாந்த குணத்தைப் பற்றும்படிக்கு அவர்கள் நெஞ்சத்தில் பறையறைந்து, மேன்மைப்படுத்தும் தன்மையுடையன. இப்போது நாம் தென்மொழியின் சிறப்பையெடுத் தாராய்வோமாக :—

## தமிழின் பொருள்.

2. இனிய தன்மைவாய்ந்த தமிழ் எனப் பெயர்புனைந்த தென் சொல்லிற்கு யாது பொருள் எனப் பார்க்கலாம். தென்தேயத்தின் கண்ணே இம்மொழி வழங்குதலால் தென்சொல் எனப் பெயர்பெற்றது. தன்னிடத்தடக்கிய இன்சொற்களுடைப் பனுவல்களால் மாநிலமாந்தரை மகிழ்வித்து இன்பம் விளக்கு மியல்பு வாய்ந்தமைபற்றித் தமிழ் என விம்மொழிக்குப் பெயர் புனையலாயிற்று. மற்றும், தென்சொல்லின் சிறப்புடை எழுத்துக்களாகிய ர, ழ, ள, ன என்னும் எழுத்துக்களில் "ழ," என்னும் ஒன்றையும் சேர்த்து இன்பம், இனிமை யெனப் பொருள்படுமாறு தமிழ் எனக் கூறினர். * "தமிழென்ப தினிமை நீர்மை" எனக் கூறப்படுதலானும், தமிழ் என்பதற்கு இனிமை, இன்பம், குணம், எனப் பொருள்படும் என வறிதலாகும்.

## தமிழ் வந்தவாறு.

3. இத்தன்மையதான தென் சொல்லாகிய தமிழை, முதலில் சிவபெருமான் பொதிய மலையில் தவஞ் செய்துகொண் டிருந்த அகத்தியமா முனிக்குக் கற்பித்தார். இதனையே,

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனில்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவாலார்"

(காஞ்சி புராணம்.)

என்பதனாலேயே இதன்பெருமை விளங்குவதுகாண்க. தமிழ்மக்கட் காகவும், சங்கத்தார்கட் காகவும் சிவபெருமான் அநேக உதவிகளைப் புரிந்ததாகக் கூறப்படும் விஷயம் திருவிளையாடற் புராணத்திலும் மற்றவைகளிலும் காணலாகும். மற்றும், தமிழில் பண்களால் துதிக்கப்பட்ட நாயன்மார்களது வாக்காலும் உணரலாம்.

## தமிழ் நாடு.

4. இம்மொழி வழங்கும் நாட்டிற்குத் தமிழ் நாடு என்று பெயர். அவைகளாவன:-பாண்டிநாடு, சோழநாடு, சேரநாடு, நடுநாடு, தொண்டைநாடு என்பனவே. இவைகளில் முக்கியமாக வழங்கப்படுதலான முத்தமிழ் நாடாகிய சேர சோழபாண்டிய நாடுகளில் சோழநாட்டை நன்னூலார் கொடுந்தமிழ் நாட்டினில் ஒன்றாகச் சேர்த்து,

"தென் பாண்டி குட்டங் குடங் கற்காவேண் பூழி
பன்றி யருவா அதன்வடக்கு—நன்றாய
சீதம் மலாடு புன்னாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநா டெண்."

* பதிற்றோராம் நிகண்டு.

எனக் கூறி யிருப்பினும், சேரநாட்டுச் சரிதைகளாலும், தமிழ்ப் பாவலர் தமிழ்க் கவிவாணரைப் போற்றிக் கூறியபாக்களாலும்,

"செந்தமிழ் மொழியைச் செல்வர் கூட்டுண்ண
நந்தலில் நூல்கள் நலம்பெற வருளிய
நடுநீர் மையினெம் நரை மூதாட்டி
தொடுநீர் வரைப்பிற் சோறுடைத் தென்னும்
தொல்சீர் பரவிய சோணாட்டின் கண்"

என நம் நரை மூதாட்டியாரால் புனைந்து கூறப்பட்டமையாலும், செந்தமிழ் வழங்கிய தேயமெனவே கொள்ளலாகும். பின்னும் நன்னூல் சிறப்புப் பாயிரத்தில்,

"குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்"

என்று கூறியுள்ளார். அதாவது கிழக்கே வங்காளக் குடாக்கடலையும் (Bay of Bengal) தெற்கே குமரிமுனையையும், மேற்கே குடகு மலையையும், வடக்கே திருவேங்கட மலையையும் எல்லையாகவமைத் துரைத்தார். மேற்கூறிய தமிழ் நாடுகளைத் தமிழ்வல்லவர்கள் புனைந்து கூறியதை, முக்கியமாகப் பாண்டி நாட்டையும், சோழ நாட்டையும், தொண்டை நாட்டையும், நடு நாட்டையும், சேர நாட்டையும் பற்றிக் கூறுகிற பாடல்களை ஆராயுங்காலத்து, தமிழரசர்கள் தமிழிலேயே அரசாங்கத்தை நடத்திய வகையும், நாட்டின் செழுமையையும் நன்கு புலப்படுத்தி யிருக்கின்றனர் என விளங்கும். முதலில் பாண்டிநாட்டை ஆராயுங் காலத்து திருவிளையாடல் புராணத்தில்,

"விடை யுகைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வட மொழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திட முறுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொல்
..............வழுதிநாடன்றே"

எனக் கூறியிருத்தலைக் காண்க. மற்றும் அருணாசல புராணத்தில்

"தோடுகமழ் சந்தன வனத்திடைதி ளைந்தே
நீடுதமி ழின்சுவை யளைந்துநெடு நாளா
யாடுமயில் அன்னவர்க ளன்னநடை போல
வாடைமிசைத் தென்றல்புகும் வையைவள நாடு"

அதாவது பூவிதழ் மணக்கும் சந்தனவனத்தின் மத்தியிற் சஞ்சரித்து, என்றுமுள தமிழின் மதுரம் அளைந்து நெடுநாளாய் ஆடுகின்ற மயில் போல, பெண்கள் நடைபோல வாடைக்காற்றோடு சம்பந்தமாகத் தென்றற்காற்று வருகின்ற வையையாறு பொருந்திய வளம்பெற்றது பாண்டி நாடு. மற்றும்

"வெவ்விருக ணிடையை மின்னென மருண்டே
செவ்விபெரு சேதகை செறிந்தலரு நாடு
நவ்வியனை யாரளக நள்ளிருள தென்றே
மவ்வலரு கேயலரும் வையைவள நாடு"

அதாவது, வெப்பமதைச் செய்யும் கண்களிரண்டையுமுடைய பெண்களி

னிடையைப் பார்த்து மின்னலென்று மயங்கி அழகுபொருந்திய தாழை கள் புஷ்பிக்கும் நாடு. மான்போன்ற மாதர்கள் கூந்தலைப்பார்த்து இருள் என்று நினைத்து முல்லைச்செடிகள் கரையில் புஷ்பிக்கும் வையை ஆற்றினால் வளம்பெற்ற பாண்டிநாடு எனப் புனைந்து கூறியதைப் பரக்கக் காணலாகும். மற்றும், மகா பாரதத்தில் அருச்சுனன் தீர்த்த யாத்திரைக்குச் செல்லுங்கால் பாண்டி நாட்டிற்கு வந்தான் என உரைக்கும் முன்னர் அதன் பெருமையைக் கூறுவதன்பொருட்டு—

"வளவன்பதி முதலாக வயங்கும்பதி தோறும்
துளவங்கம ழதிசீதள தோயங்கள் படிந்தே
யிளவண்டமிழ் எழுதேடுமுன் னெதிரேறிய துறைசூழ்
தளவங்கமழ் புறவஞ்செறி தண்கூடல் புகுந்தான்"

என வில்லிப்புத்தூராழ்வாரால் கூறப்பட்டமை காண்க. இதனால் நாம் பாண்டிநாட்டினது வளமையும், புகழும் அறிந்தோம். இனிச் சோழநாடு என்றால், சோழநாட்டின் வளமையையும், தன்மையையும் நான் முதலிலேயே, "செந்தமிழ் மொழியை" என்ற பாட்டின்கண் வெளிப்படுத்தினேன்.

பிறகு தொண்டை நாட்டைப்பற்றிப் பார்க்குங்காலத்து, இத்தொண்டைநாட்டின்கண் மிக்க பக்தியுள்ள உண்மைச் சிவனடியார்களும், நற்பல நூல்களியற்றிய புலவர்களும் பிறந்துள்ளார். உதாரணம் பவணந்தி முனிவர்.

"தன்னூர்ச் சனகையிற் சன்மதி மாமுனி தந்த மைந்தன்
நன்னூ லுரைத்த பவணந்தி மாமுனி நற்பதியும்
சின்னூ லுரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னூ புரத்திரு வன்னமின்னே தொண்டை மண்டலமே"

எனவும், பின்னும் திருத்தொண்டர் புராணத்தில் திருக்குறிப்புத் தொண்டரது பிறப்பிடமாகிய தொண்டை மண்டலத்தைப் புகழ்கையில், சேக்கிழார் பெருமான்,

"நன்மை நீடிய நடுநிலை யொழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப
வன்மை யோங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பில்
தொன்மை மேன்மையின் நிகழ்பெருந் தொண்டை நன்னாடு"

எனக் கூறியிருப்பதும் காணலாகும். இவ்வாறே சேரநாடு நடுநாடு முதலியநாடுகளும் புனைந்து கூறப்பட்டமை பற்பல நூல்களினின்றும் அறியலாகும். இத்தகைமையாக நீர்வளம், நிலவளம், குடிவளம், கோல்வளம், நிரம்பிப் பாவலர்களால் புனைந்து கூறப்பட்டது இத்தமிழ் நாடு.

பிரிவு : இயற்றமிழ்.—இத்தகைமையதாகச் செழிய நாட்டின்கண் உலாவிவரும் தமிழ் மொழியானது மூன்று பிரிவினதாய், நாற்கவியுடைத்தா யிருக்கின்றது. அவையாவன:-இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்பவைகளே. நாற்கவிகளாவன:-ஆசுகவி, மதுரகவி, வித்தாரகவி, சித்திரகவி என்பவைகளே. இவ்வகையான பிரிவுகள் ஒவ்வொன்றினையு மாராயுங்காலத்து, முதற் பிரிவு, இயற்றமிழ்; அதாவது, வசனம். வசனத்தில் எழுதுங்காலத்து புணர்ச்சி விதிகளையொட்டி சந்தர்ப்பத்திற் கேற்றவாறு தக்க பதங்களை உபயோகித்து, நன்குவரையக் கற்றுக்கொள்

ளவும், வசன ரூபகமாயிருக்கும் புராண இதிகாசங்களைப் படித்தால் பின் இசையில்வரும் பண்களை எளிதில் உணரவுமே உண்டானது இரண்டாவதாகிய இயற்றமிழ்.

இசைத்தமிழ்:—இசைத்தமிழ் என்றமட்டிலேயே கீதமுடன் பாடத்தக்கது என்பது வெளிப்படை. செய்யுட்களில் வெண்பா என்றால், சங்கராபரண இராகம் என விளக்கும். இஃது மிகவும் கடினமானதே. ஏனெனில், நாம் வசனமெழுதுவதுபோல் இதை எழுதமுடியாது. உதாரணமாக, அறுசீர்க்கழில் நெடிலடி யாசிரிய விருத்தம் என வெடுத்துக்கொண்டால் முதலில் ஒவ்வொரு அடியும் அறுசீர்களை யுடைத்து. அஃதேபோல் நான்கு அடிகளெழுதவேண்டும். அம்மட்டோ, இவைகளில் எதுகை மோனைகள் அமையப்பெற்றிருக்கவேண்டும். காலத்தையு மனுசரித்தல்வேண்டும். பத்தழகு, முப்பத்து இரண்டு உத்திகளை யொட்டியிருத்தல் வேண்டும். செய்யுள் என்பதி னிலக்கணத்தைக் கூறுமிடத்து,

"பல்வகைத் தாதுவி னுயிர்க்குடற் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாகவு ணர்வினில்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்"

என்றமை விளக்கும். மற்றும், "குன்றக்கூறல்" முதலிய பத்துக் குற்றத்தினின்றும் விலக்கப்பெற்று இருத்தல்வேண்டும். இத்தன்மைபொருந்தியது இசைத்தமிழ்.

நாடகத் தமிழ்.—இதைப்பற்றிக் கூறுத லவசியம். நாடகத்தமிழ் என்றால், இதிகாசபுராண சரிதைகளை, பாமரர்களுக்குப் புகட்ட, தான் கசடறக்கற்று, நடித்துக் காட்டலே. ஒருவன் நாடகத்தமிழ் பயில்வானேல் அவன் முத்தமிழ் நாற்கவியிற் றேர்ச்சியுடையோனாய், சங்கீத விற்பன்னனாய், வனப்புடையோனாக இருத்தல்வேண்டும். அவன் பெருநூல்களினின்றும் தலைவன் தலைவியரது கூற்றை நன்குணர்ந்து பின்பு நவரசங்களுடன் நடித்துக் காட்டல்வேண்டும். இஃதெல்லாம் இக்காலநிலைமைக்கு ஏற்புடைத்தன்று. அப்படிக் கற்று அறிந்த பெரியோர்களு மிலர். அப்படியிருந்து நடித்தாலும் பார்ப்பாரு மிலர். அந்தோ என்ன காலக்கொடுமை! எல்லாம் கலியின் விளைவு அன்றோ! (தொடரும்)

R. S. சாம்பசிவ சர்மன்,
தமிழ்த்தொண்டன்.

---

## கைவல்ய நவநீதவசனம்

(108-ம் பக்கத் தொடர்ச்சி.)

மேற்கூறியவற்றால் பிராரப்தம் தேகத்தோடு சம்பந்தப்பட்டதென்றும், இத்தேகத்தில் கட்டுப்பட்டிருப்பதே பிராரப்தம் என்றும் அறியலாகும். பிராரப்தம் எள்ளளவு மின்றி யொழிந்தால் தேகம் ஒருகணமேனும் தரியாது. ஞானம்வந்தபின், ஜீவன்முத்தருடைய ஆன்மாவின்கண் தேக சம்பந்த உணர்ச்சியில்லை யாதலின், பிராரப்த அனுபவ உணர்ச்சியும் இல்லை. ஜீவன் முத்தர்களில் மேற்கண்ட நால்வகையாகிய பேதமிருப்பதற்குப் பிராரப்தத்தின் அளவேகாரணம். இப்பிராரப்தம், ஞானம் கிட்டாவண்ணம் தடுக்கவும் வல்லமையுடையது. எவ்வாறெனின் —

ஒருவன் ஒரு ஜன்மத்தில்செய்த கன்மம் நான்கு ஜனனங்களுக்கு வித்தாகி விடுகிறது. அதாவது, ஒருவன்செய்யும் ஒருபெரிய பாபகன்மத்திற்கு, அவன நான்கு ஜன்மங்கஎெடுத்து அதையனுபவிக்க வேண்டும் என்று தண்டனையேற்படுகிறது. அப்படியிருக்க, அடுத்த ஜன்மத்தில் அவனுக்கு ஞானமுண்டாளுல், உடனே பிறவி யொழியவேண்டும். அப்படிக்கின்றி, ஞானம்வந்த பின்பும், முன்பிராரப்த வினையை யனுபவிக்க அவன் ஜனிக்கிருனெனின், ஞானிக்கும் பிறவி யுண்டென்ருகிறது. இது சுருதிக்கு விரோதம். மற்றென்னெனின், எப்போது நான்கு ஜனனங்களெடுக்க வேண்டிய பிராரப்த மிருக்கிறதோ, அப்போது அந்த முதல் மூன்று ஜன்மங்களில் ஞான முண்டாகாது. கடைசியான நான்காவது ஜனனத்திலேதான் ஞானம் உண்டாகா நிற்கும். நான்கு ஜன்மங்களுக்குக் காரணமான அப்பிராரப்தமே, முதல் மூன்று ஜன்மங்களில் ஞானம் உதியாவண்ணம் தடைசெய்யும். இதைத்தான் வாசிட்டத்தில்,

"இனிப்பிறவா முடிவான ஜன்மத்தில் மெய்ஞ்ஞானம் எளிதினுண்டாம்........" என்று கூறப்பட்டிருக்கிறது.

(ஞானிகளை யிகழ்ந்து கூறலாகாதெனல்)

ஞானிக்கு ஞானமுதயமானதுமுதல் ஆகாமியகன்மம் சேர்வதில்லையென்ரேம். பிராரப்த கர்மமோ, மேற்கூறியவாறு (சுகதுக்கங்களின் சமபுத்தியோடு கனவைப்போல்) அனுபவித்துத் தீர்க்கப்படுகிறது. அச்சன்மத்தில் ஞானம் வருமட்டும் செய்திருக்கும் சஞ்சித கன்மங்கள் எவ்வாறு தொடராமல் மாண்டுபோம் என்னில், அறிவுடையோர் பிரம்மவித்து பூரணஞானியே என்றுணர்ந்து, பக்திசெய்து அவன் புண்ணிய கன்மபலன்களை ஏற்றுக்கொள்வார்கள். அறிவிலாதமூடர் "ஓ மகா ஞானியோ! அவன் சாப்பிடவில்லையோ, போகவில்லையோ வரவில்லையோ" என்று அவனை யிகழ்ந்து கூறி, அவன் செய்துள்ள பாப கன்மப்பலன்களையெல்லாம் ஏற்றுகொள்வார்கள். ஆதலால், ஞானியைப் பூசிப்பவனுக்குப் புண்ணிய பலனும், இகழ்பவனுக்குப் பாபபலனும் பிராப்தமாகும் என்று அறியத்தக்கது.

(இவ்வாறு மூவித கன்மங்களும் ஒழிந்த ஞானி விதேகமுத்தியடைவதைக் கூறுதல்)

சாதாரணமாக ஒருவர் மரிக்கும்போது, தூலதேகம் யாவருங்காணும்படி சவமாய் இங்குவீழ்ந்து விடுகிறது. சூக்குமசரீரம் அவித்தையாகிய காரணசரீரம் என்ற பெட்டியி லொடுங்கிக்கொள்கிறது. ஆவரணம் அல்லது அஞ்ஞானம் அல்லது காரணசரீரம் ஜீவன்செய்த * மூவித கன்மமூட்டையை ஆன்மாவோடு ஒட்டிக்கொண்டு அதன் கூடச்செல்வதற்கு ஒரு பசைபோல் உதவியாயிருக்கிறது.

ஒருவனுக்கு ஞானம் உதயமானபோது, அவனிடமுள்ள அவித்தையாகிய காரண சரீரம் ஞானக்கினியால் தகிக்கப்படுகிறது. பிராரப்தம் ஒழிந்த அக்கணமே தூலதேகம் சவமாய் விழும். அப்போது சூக்கும

* மூவித கன்மங்கள்:—புண்ணிய கன்மம், பாப கன்மம், (இவை இரண்டும் கலந்த) மிசிர கன்மம் ஆகிய மூன்றும்.

தேகமானது, 'கொல்லன் உலையிலுள்ள இரும்புண்ட நீர்போல்' * துரிய மாகவும், † விபுவாகவும் உள்ள சொரூபத்தில் விலீனமாம்.

[யாதொன்று அனுபவத்தில் நினைப்பு மறைப்பு சலனங்களை யுண் டாக்குவதற்குக் காரணமாக விருக்கிறதோ, அதுவே காரண சரீரமென் றும், அவித்தை அல்லது அஞ்ஞான மென்றும், ஆவரண மென்றும் கூறப் படும். மனதை யொடுக்கி, மேலுள்ள அந்தகாரமான பாழைக்கடந்து, தன்னை யறிந்தஞானி ஆவரணம் என்னும் திரையை யறுத்தெறிந்தவனாகி ருன். அவனுடைய அவித்தையென்ற காரணச் சரீரம் ஞானாக்கினியால் தகிக்கப்பட் டழிகிறது. இங்கு ஞானாக்கினி என்பது, "தான் தேகமல்ல, அதற்கு அன்னியமாகிய அழியாத ஆன்ம சொரூபமே" என்று அனுபவ மாகவறிந்து அந்தத்ததாகார நிலையில் நிலைத்திருக்கும் தன்மையேயாகும்.

காரண சரீரம் அழிந்துபோனதால், தூலதேகம் சவமானபின் சூக்கும தேகத்திற்குப் பற்ற இடமில்லை. ஆதலின் எல்லாக் காரியங்களும் தத்தம் காரணங்களில் ஒடுங்கு முறைபோல் சூக்குமதேக தத்துவங்களும் சத்துவ இராஜோகுண தன்மாத்திரை பூதங்களாகமாறி, உதித்தமுறையே ஒன்றி லொன்றொடுங்கி ஆகாயமாத்திரமாகி, பின்னர் அதுவும் விக்ஷேப சத்தியி லொடுங்கி, விக்ஷேபம் மூலப்பிர கிருதியி லொடுங்கி, மூலப் பிரகிருதியும் முடிவில் தன் காரணமான பிரம்ம சொரூபத்தில் இலயமாய் விடுகிறது. ஆகையால் துரியமும் விபுவுமாகிய சொரூபத்தில் விலீனமாகும் என்று உரைக்கப்பட்டது.]

(மேற்கண்டவாறு மூன்று சரீரங்களும் ஒழிந்த ஜீவன் முக்தருடைய ஆன்மா அடையும் முத்திநிலை கூறப்படுகிறது)

கடம் என்பது உடைந்துபோனால் கடாகாயம் (கடத்திற்குள்ளிருக் கும் ஆகாயமும்,கடத்திற்கு இடங் கொடுத்திருக்கும் ஆகாயமும் சேர்ந்தது கடாகாயம்) மகாகாயத்தோடு கலந்து ஏகமாவதுபோல், ஜீவன முத்தர்க ளுடையதேகமாகிய உபாதி நீங்கியதே, அவர்கள் ஆதி, அந்தம், மத்தியம் ஆகிய ஒன்றுமின்றி, உள்ளென்றும் புறம்பென்றும் வித்தியாசமின்றி, எங் கும் நிறைந்து ஒரே நிலையில் விளங்குவதாகிய விதேக கைவல்லிய பதத் தைப் பெற்று, அந்த நிலையில் என்றுமிருப்பார்கள்.

[ஜீவன் முத்தர் தேகம் நீங்கியபின், விதேகமுத்தி யடைவதைப் பற்றிக் கூறும்போது "பெரிய தூலமுங் காலத்தால் பிணமாகிவிழும்" என்று கைவல்லியம் கூறுகிறது. இந்த விஷயத்தில் சில சந்தேக ஆக்ஷே பங்கள் இருப்பதுபோல் சிலர்க்குத் தோன்றலாகும். ஆகையால், அவற் றைப்பற்றி யீண்டுக் கூறுவது மிகையாகாதெனக் கருதுகிறோம்.

" மறுபிறவியில்லை; ஒரேதரம் ஜனித்து ஒரேதரம் மரிக்கிறோம் " என்றமயக்கமுடையோர், மேற்கூறப்பட்ட கடாகாய திருட்டாந்தத்தைக்

---

* துரியம்=சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்றவஸ்தை களின் அபிமானிகளாகிய விசுவன், தைஜஸன், பிராஞ்ஞன் என்ற மூவர் க்கும் சாக்ஷியாக விருக்கும் சர்வசாக்ஷி, எதிலும் தாக்கற்ற நான்காவது பொருளாதலால், அது துரியம் என்னப்பட்டது.

† விபு=தேசகாலவஸ்து பரிச்சேதமற்று, எங்கும் வியாபகமாக உள்ள பொருளாதலின் அத் துரிய பரம்பொருள் விபு என்னப்பட்டது.

சொண்டு, " ஆன்மா தேகத்தைவிட்டு நீங்கியதே ஒன்றைப்பற்ருது தனியாயிருக்க அதனுல் முடியாததலால், தான் உதித்த விடமாகிய பரமான்மாவிற் கலந்து விடுகிறதேயன்றி, மறுபடி பிறப்பதில்லை" என்கிருர்கள். இது சுருதி, யுத்தி, அனுபவங்களுக்குப் பொருந்தாததேயாகும்.

நமக்கு முன்ஜனனம் இருந்தது என்று உணர்வதற்குப் பல அத்தாக்ஷிகளுள. இதைப்பற்றி ஆன்ருேர்கள் அனேகர் பூர்வீகத்திலும், சமீப காலத்திலும் ஒருவராலும் மறுக்கமுடியாத விதமாய் நிரூபித்துத் திரப்படுத்தி யிருப்பதால் நாம் மிகச்சுருக்கமாகவே கூறிமுடிப்பாம்.

சிருட்டியில் உள்ள ஏராளமான பேதங்களே முதலாவதாக அதை நிரூபிக்கின்றன. முன் பிறப்பில்லையெனின், கடவுள் நீதியில்லாதவர், பாரபட்சமுடையவர் என்ருவது, அல்லது சிருட்டியில்தோன்றியிருக்கும் மகா அற்புதம் பொருந்திய இவற்றை யெல்லாம் ஆக்கியளித்துத் துடைக்கும் சர்வவல்லமையுள்ள ஒருகர்த்தா இல்லையென்ருவது முடியும். எப்போது முன் ஜன்மத்தில் செய்த கன்மத்தால், இந்த வர்த்தமான ஜன்மம் உண்டாயிற்றென்று விளங்கியதோ இவ்வாறே கடந்த ஜன்மத்திற்குக் காரணமாக அதற்குமுன் ஒருஜன்மம் இருந்திருக்க வேண்டு மென்றும், அவ்வாறே உத்தரோத்தரம் அனுதிகாலந்தொட்டு ஜனனம் தொடர்ந்து வருகிறதென்றும், இந்த ஜன்மத்தில் செய்யும் கன்மத்தால் மேல் ஜன்மம் உண்டாகுமென்றும் 'அங்கை நெல்லிபோல்' விளங்கும்.

சடாகாய திருட்டாந்தம்போல் எல்லா ஆன்மாக்களும் பரமான்மாவில் கலந்து விடுமென்று கருதலாகாது. ஜீவன் முத்தனுடைய ஆன்மா அவன் தேகத்தைவிட்டுப் பிரியுங்கால் அதனிடம் கன்மப் பற்றில்லை. ஆதலின், அது பரமான்மாவைப் பற்றியிருப்பதால்,அதில்கலந்து அந்நிலையையடைகிறது. மற்ற பேருடைய ஆன்மாக்களுக்குக் கன்மப்பற் றிருப்பதால்; அவை சாதாரணமாய் நடக்கும் ஒருவன், முதலில் ஒருகாலை முன்னுக்குத் தூக்கிவைத்து, அக்கால் பூமியிற் படிந்தபின்பே மறுகாலை எப்படித் தூக்கிவைக்கிருனே, அதைப்போன்றே, ஆன்மா ஒரு தேகத்தைப் பற்றியபின்பே இருக்கும் தேகத்தை விடும். ஆதலால் அவை ஜீவன்முத்தரது ஆன்மாவைப்போல் கன்மப்பற்றின்றி தேகத்தைவிட்டு வெளிப்படுவதுமில்லை, பரமான்மாவில் கலந்து விடுவது மில்லை.

ஞானிக்குத் தன்தேகம் புண்ணிய ஸ்தலமாகிய பரிசுத்தத் தலத்தில் விழவேண்டும், உத்தராயணம், சிவராத்திரி, ஏகாதசி முதலிய புண்ணிய காலத்தில் தேகம் விழவேண்டும் என்ற அபேக்ஷையேயில்லை. பரிசுத்தத் தலமோ மிக்க அசுத்தத் தலமோ எந்த விடத்திலாயினும் சரி, எந்தக்காலத்திலுயினும் சரி அவனுக்கு அதைப்பற்றி அவசியமே யில்லை.

குமாரதேவர் சுத்தசாதகத்தில்,

"சூக்குமந் தனது காரண மடையத் தூலமிங் ககன்றதே யென்ருற்
சூக்குமந் தனது காரணம் விடுத்துத் தூலமொன் றெடுத்ததென் [றுணர்வாய்."

என்றருளியிருக்கிருர்.

இதனுல் தேகம் சவமாகப் பூமியில் வீழ்ந்தால் முத்தியில்லை யென்று கருதலாகாது. இது ஒரு விசேஷ மார்க்கமேயன்றி வேறில்லை.

"தேகம்யா தேனுமொரு சித்திபெறச் சீவன் முத்தி
யாகுநெறி நல்லநெறி யையா பராபரமே."

என்று தாயுமானவர் அருளியதாலும் இது நன்கு விளங்குதல் காண்க. அவ்வாறின்றி தேகம் விழுந்தால் முத்தியில்லை யெனின், தாயுமானவர் முதலிய எண்ணிறந்த மகான்கள் முத்தி யடையவில்லை என்றாகும். இது உலக அபிப்பிராயத்திற்கு மாறானது. மேலும் பிரபல நூல்களில் கூறி யிருப்பதற்கும் இது விரோதமாகும்.

"பற்று முனிவு பயஞ்சுகங்கள் பயிலா னெனினும் பயின்றிடினுஞ்
சொற்ற வெவர்க்கும் பிரமேயந் தொடரா னெனினு நன்பாலர்
பெற்ற பிரமே யத்துறினும் பெரிய மனத்தோன் காசியிற்சா
வுற்ற பொழுது நாய்க்கெரிப்போ ருழைசா வுறினு முறும்பதங்கேள்"

எனவாசிட்டத்தும்,

ஞானியின் தேகத்தைக் குகை செய்திருத்திப் பூசிக்க வேண்டுமென் றும், அதைத் தீயிட்டெரித்தால் ஈசுவரனது கோயிலை யெரித்ததுபோல் ஆகுமென்றும், அதனால் நாடெலாம் தீமண்டி யழியுமென்பதைப் பற்றியும்,

அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில்
வெந்திடி னாடெலாம் வெப்புந் தீயினி
னொந்தது நாய்நரி நுகரி னுண்செரு
வந்துநாய் நரிக்குன வாகும்வை யகமே.

எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடி
லண்ணறங் கோயி லழலிட்ட தாங்கொக்கு
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமா
மெண்ணரு மன்ன ரிழப்ப ரரசே."

என்று திருமூலர் திருமந்திரத்திலும் கூறப்பட்டிருப்பதால், தூலதேகம் சவமாக வீழ்ந்தால் முத்தியில்லை யென்று கருதுவது தவறென்று நன்கு விளங்குவது காண்க.

(அந்தகைய கைவல்யநிலை புதிதாக உற்பத்தியானதல்ல எனல்)

சற்சீடனே! ஆகாயமானது எல்லா வஸ்துக்களின் உள்ளும் புறம்புமாய் எங்கும் நிறைந்திருந்த போதிலும், பூமியைத் தோண்டியபோது அப்போதுதா னுண்டானதுபோல் தோன்றும் கூபாகாயம் (கிண ற்றிலுள்ள ஆகாயம்) போல், பிரம்மஞானநிலை சிரவண மனன நிதித்தியாசனங்களால் அப்போ துண்டானதுபோல் தோன்று கிறதேயன்றி, உண்மையில் நாம் எப்போதும் (முக்காலத்தும்) அகண்ட சொரூபமாகிய பிரம்மமே யென்று இருப்பாயாக.

கானலில் தோன்றும் சலம்போலவும், கிளிஞ்சிலில் தோன்றும் வெள்ளிபோலவும், இந்திரஜாலத்தில் காணப்படும் நகரம் போலவும், ஆகாயத்தில் தோன்றும் நீல நிறம்போலவும், கயிற்றில் புலப்படும் அரவம்போலவும், மலடியின் மைந்தன், முயலின்கொம்பு என்பவைபோலவும், கட்டையில் காணப்படும் மனிதன் போலவும் நாமரூபமான இப்பிரபஞ்சம் முழுமையும் அசத்தியமே. ஞான சொரூபமான பிரம்மம் ஒன்றுமே மெய். அத்தன்மையான உன் நிஜசொரூபத்தை நம்மாணையாக மறவாதே.

[உன்னை மறவாதே யென்பது, முன்னிலையற்ற அகண்டாகார நிலையில் தற்போதமற்று நில் என்பதாகும். அது நான் என்ற உணர்ச்சியோடு கூடிய நிலையல்ல. தற்போதமற்ற நிலையாதலின் முன்னிலைச்சுட்டறியவும், ஒன்றென்ருவது, இரண்டென்ருவது கூறவும் அங்கொன்றுமில்லை.

"ஊமைகண்ட சொப்பனம்போன் றுள்ளே யறிவதன்றி
நாமிதெனச் சொற்றிடவு நண்ணுமோ—தாமதம்போ
லாங்கதுவாய்ப் போவதலா லன்றிதா மென்றுரைக்க
வீங்கொருவ ருண்டோ விசை.'' என்றனர் வள்ளலார்.

இந்த நிலையைவிட்டு இரண்டாக விருப்பதே நிலையென்று கூறுவாறுமுண்டு. அது தவறேயாகும். இரண்டிருந்தால் மூன்ருவது முண்டு. பிறகு யாவுமுண்டாம். ஆகவே முத்தியின்ரும். தானிருப்பதே உணர்ச்சியிலையெனின், இரண்டாவ தொன்றுண்டென்பது அனுபவத்திற்கு முற்றும் விரோதமே. "நானுமில்லை நீயுமில்லை யாருமில்லை யானதே'' என்று அருணகிரிநாதர் அருளியபடி, தன்மையாகிய நானுமில்லை, முன்னிலையாகிய நீயுமில்லை, என்னைத் தானுக்கிக்கொண்டு தான் தானுக என்றும் எங்கணும் பிரகாசிக்கும் சச்சிதானந்த சொரூபம் ஒன்றேயுள்து. "நீயற்ற வன்னிலையே நிட்டையதி னியிலையோ வாயற்றவனே மயங்காதே'' என்ருர் தாயுமானவர்.

"நானே யென்று மெவ்விடத்து நன்ரு யுண்டா யிருக்குகேன்
நானே யென்று மெவ்விடத்து நன்ருய்த் தோன்றி விளங்குகேன்
நானே யென்று மெவ்விடத்து நன்ரு யின்ப மாய்நிகழ்கேன்
நானே யென்று மெவ்விடத்து நன்ருய் விளையா டாநிற்கேன்''

என்று ஸ்ரீ குமாரதேவஸ்வாமிகள் கூறியருளினர்.

"அண்ண விருப்பிட மாரு மறிகில
ரண்ண விருப்பிட மாய்ந்துகொள் வார்களுக்
கண்ண லழிவின்றி யுள்ளே யமர்ந்திடும்
அண்ணலைக் காணி னவனிவ னுமே''.

என்று திருமூல நாயனுர் அருளினர்.

"அத்துவித முத்தி யளித்தருளு நாதாவென்
பொய்த்துவிதம் போமாறு போதித்த—கர்த்தனே
முத்தியிலு மும்முதலு முண்டென் றுரைப்பதுவுஞ்
சத்தியமோ மித்தையோ சாற்று'' என்றும்,

"கையிலுறு புண்ணுக்குங் கண்ணுடி வேண்டுவமோ
மெய்யுணர்வி லுண்டோ விபரீத—மையறிவு
மோரறிவாய்ப் போனவிடத் தோகோகோ மும்முதலுஞ்
சோராம னிற்குமோ சொல்'' என்றும்,

"சைவஞ் சிவத்தோடு சம்பந்த மானமையாற்
சைவமே யத்துவிதஞ் சாதிக்குஞ்—சைவத்தை
வேறென்று கூறற்க வேறற்ற வேதாந்தக்
கூறென்று கொள்ளுதலே கொள்''

என்றும், வள்ளலார் திருவாய் மலர்ந்தருளினர்.

"புறனகங் கீழ்மேல் பக்கம் புணர்வதோர் பொருளு மில்லை
திறனுடை யுருவ மெல்லாந் தானுகித் தேக மின்று
யறன்முறை யடங்கு ஞான யோகினு லறியப் பட்ட
விறன்மலி ஞானு னந்த மேன்மையாய் விளங்கா நிற்கும்"

என்றும்,

"நித்தனும் பரமேசன் நானென்று நிச்சயிக்கின்
முத்தனல னெனினுமவன் முத்தனு முயிருடம்பின்
பெத்தமற ஞானத்தாற் காட்சிபெறின் சாந்தியுடைச்
சித்தனுய்ப் பொருட்பற்றுத் தீர்த்துவீ டடையுமால்"

என்றும் தேவிகாலோத்தரத்தில் பரமசிவம் பார்வதி தேவியார்க்கு அருளியிருக்கிறுர்.

இவ்வாறு கூறப்பட்டுள்ளது அத்துவித நிலையை நன்கு அறிவிக்கவும், தன்னையறிந்து தலைவனிற்கலந்து, தானென்ற தற்போத மொழிந்து, தானதுவாய், ஏகமாயகண்டமாய்த் ததாகாரமாய், விண்போன் றெங்கு நிறைந்து நிற்பதாகிய அதீதநிலையே முடிவான நிலையென்று திடமாயுண ரச் செய்யவுமேயன்றிச் சிலர் மூடமதியாற் கருதுவதுபோல் அகங்காரத் தால் நானே கடவுள், என்னை யன்றி வேறு கடவுளில்லை யென்று மூடத் தனமாய்த் தவருன பொருள் கொள்வதற்கல்ல. அப்படிக்கருதுவதும், வேதாந்தம் அப்படித்தான் கூறுகிறதென்று பிதற்றிக்கொண்டு தூஷித் துத்திரிவதும் வாசாஞானத்தால் குதர்க்கம் பேசித்திரியும் அறிவிலார் செய்கையேயாகும்.

மேற்கூறியபடி கானல் நீர், கிளிஞ்சில் வெள்ளி, கயிற்றரவு முதலிய வைகளைப்போலவும், கனவைப் போலவும் உலகம்பொய் என்பதை யொப் பாமல், உலகம், அதாவது மாயை நித்தியமே என்றுகருதித் தருக்கிப்போ ரும் உளர். அக்கொள்கை சுருதி, யுக்தி, அனுபவங்களுக்கு மாறுனதே. நாம் அநுபவமாக ஒன்றை அறியாமுன்னம், சுருதிகளில் கூறி யுள்ளவற் றில் ஆன்றோர்களாகிய மஹான்கள் அனுபவசித்தமாக வறிந்து கூறிய வற்றை நம்பவேண்டும்.

தாயுமானவர்,

"விதிக்கும் பிரபஞ்ச மெல்லாம்—சுத்த
வெயின் மஞ்ச ளென்னவே வேதாக மங்கள்
மதிக்கு மதனை மதியார்—அவர்
மார்க்கந்துன் மார்க்கஞ்சன் மார்க்கமோ மானே... சங்கர

என்றும்,

தேன்முகம் பிலிற்றும் பைந்தாட் செய்யபங் கயத்தின் மேவு
நான்முகத் தேவே நின்னுல் நாட்டிய வகில மாயை
கான்முயற் கோடோ வென்கோ கானலம் புனலோ வென்கோ
வான்முக முளரி யென்கோ மற்றென்கோ விளம்பல் வேண்டும்

என்றும், இன்னும் வேறுபல விடங்களிலும் உலகம் கானல் நீர், கயிற்றரவு, கனவு முதலிவற்றைப் போன்ற பொய்த்தோற்ற மென்று தாயுமானவர் கூறியுளர்.

"மந்த விருளிற் கயிற்றரவின் மாறுபாடாய்த் தோன்றுதல் போல்
இந்த வுலகு முயிர்களுமவ் வீசன் றானு முயிரடையும்
பந்தம் வீடு மீசன்செய் பஞ்ச கிருத்தி யங்களுமே
அந்த நமது சொரூபத்தி லாரோ பிதமாய் நின்றிலங்கும்"

என்று குமாரதேவர் கூறியுள்ளர்.

"பழுதை பாம்பல வென்றொளி யாற்கண்டும்
பாம்பு வாதனை தீரா தவனென
வெழுமுன் சிற்சுக நின்னரு ளாற்கண்டு
மிந்நிலப் பொய்மை வாதனை நீங்கிலேன்
முழுது ணர்தன் முதலாய வெண்குண
மொய்த்த பஞ்சா மேமறை யுச்சியே
தழுவு வெண்சுதை மாளிகை நீடிய
சமர மாபுரிச் சண்முக வேலனே"

என்று திருப்போரூர் சிதம்பரச் சுவாமிகள் கூறியருளினர்.

ஆயினும், சிலர் இந்த ஆரோபவாதத்தைக் குதர்க்கம் செய்து கண்டித்து மாயை மெய்யென்று சாதிப்பதும், மேற்கண்ட மஹான்கள் கூறியவற்றிற்குத் தங்கள் கருத்துக்குத்தக்கபடி அர்த்தம் செய்வதும், தூஷிப்பதுமாக விருக்கின்றனர். இத்தகையோர், பிராரப்த வலியால், உண்மையை யுணராதபடி அல்லது நம்பாதபடி, மறைக்கப்பட்ட மதியுடையோராதலால் அது அவர்கள் குற்றமன்றாம். அவர்கள் "முயற்குக்கால் மூன்றே" என்றபிடிவாதத்தோடு விவகரிப்பாராதலின் அவர்களோடு வாதம்புரிவது வீண் காலக்ஷேபமாகும் என்பதே அனுபவிகளாகிய அறிஞர் கருத்தாம். மாயை மெய்யென்போர் என்றும் மாயையைக் கடவார் என்பதை யுணர்வார்களாக. "மாயையெனும் திரையை நீக்கி நின்னை யாரறிய வல்லார்," என்று நந்தாயுமானவர் அருளியதாலும் இந்த உண்மை யறியக்கிடக்கின்றது. மாயை மெய் பொய் என்பதைக் குமாரதேவருளிய கீழ்க்கண்ட செய்யுளால் நன்குணரலாகும்:—

மாயை யெனுமிவ் வுரைக்கருத்த மதிக்கின் யாதொன் றிலாததுவே
மாயை யெனவிப் படியிருக்க மதிப்ப ரதனை யிருவகையாய்
மாயை மெய்யென் றுரைத்திடுவர் மயக்கப் பட்டுத் தனைமறந்தோர்
மாயை பொய்யென் றுரைத்திடுவர் மயக்க நீங்கித் தனையறிந்தோர்.

தத்து விளக்கப்படலம் முற்றிற்று.

(தொடரும்)
சீடன்.

---

## இல்லறம்—கிரகணகாலபலன்

(103-ம் பக்கத்தொடர்ச்சி)

சூரியனுக்கும் பூமிக்கும் நடுவில் சந்திரன் செல்லும்போது சந்திரனிடத்திலுண்டாகும் நிழல் சூரியகிரணங்களால் சிவந்து தோன்றுமாதலால்

அதைச் செம்பாம்பு என்றூர்கள்; இது கேதுவாம். கேது என்பது நெருப்பைப்போன்ற நிறமுடையது என் றர்த்தந்தரும். சூரியனுக்கும் சந்திரனுக்கும் மத்தியில் பூமி வரும்போது பூமியினுலுண்டாகும் நிழல் கறுத்துத்தோன்று மாதலால் அதைக் கரும்பாம்பு என்று கூறுகின்றூர்கள். இதுவே இராகுவாம். கிரகங்கள் சுழல்வதனு லுண்டாகும் மாறுதலால் இந்நிழல்கள் முறையே பன்னிரண்டு ராசிகளிலும் தாக்குதலால் அது அவ்வவிராசியில் வசிப்பதாகக் கூறப்படும். அவ்விராசியில் வசிக்கும் மற்றக் கிரகங்களை மூடம் என்று கூறப்படும். இதை அந்தர்க்கதம் என்றும் நூல்கள் கூறுகின்றன. அவ்விரண்டிற்கும் மறைவு என்பது பொருள். அவ் விருவகையான நிழல்களுக்கும் ஒரு சக்தி உண்டு. அச்சக்தியே அந்நிழல்களுக்கு அதிதெய்வமாம். அவற்றையே இராகு கேதுக்களென்று கூறுவது. அவைகளே யிப்பொழுதும் கிரகங்களென்று நூல்கள் கூறுகின்றன. நிழல்களுக்குச் சக்தியுண்டென்பதை வைத்திய நூல்களாலுணரலாம். அரசமரத்தினிழல் பகற்காலத்தில் பித்தத்தையதிகப்படுத்துமென்றும், வேப்பமரத்தி னிழல் பித்தத்தையும், அதுசம்பந்தமான பலவியாதிகளையும் போக்கு மென்றும், மா, புளி, முதலியவற்றினிழல் உஷ்ண பித்தங்களை அபிவிருத்தியாக்கி வியாதிகளை வளர்க்கு மென்றும் இப்படியே பலமரங்களி னிழல்களுக்கும் கூறப்பட்டுள்ளன. அரசமரத்தினிழல் உஷ்ணங் குறைவாகிய காலைவேளைகளில் ஜீரணத்திற்கு வேண்டிய பித்தத்தைக்கொடுக்கும். அது ஒருஜாமம் வரைக்குமென்று வரையறுக்கப்பட்டுள்ளது. அதனுலேதான் ஜாமத்துக் குள்ளாகவே அரசமரப்பிரதட்சிணம் விதிக்கப்பட்டது. சூரிய னுச்சியி லிருக்கும்போது அரசநிழலில் தங்குவதால் மதிமயக்க முதலிய வியாதிகளுண்டாகும். அது மெலிந்தசரீரத்தையுடைய பெண்களுக்குச் சீக்கிரத்தி லுண்டாகும். புளியமரமும் அவ்வாறேயாம். இதனையே அரசமரப்பேய் புளியமரப்பேய் என்பார்கள். பலதரம் பகற்பொழுதிற் செல்வதினுல் பெண்களுக்கு ஒருவிதமான மதிமயக்கமான வியாதி தோன்றுவது இயல்பாதலால் பெண்களுக்குப் பேய் பிடித்தது என்பார்கள். இளம் பெண்களுக்கு (மங்கைமடந்தைப் பருவப் பெண்களுக்குச்) சீக்கிரந் தாக்கும். உஷ்ணமதிகமுள்ள நமது தேசத்துப் பெண்களுக்கே யன்றிக் குளிர்மிகுந்த பிரதேசங்களி லுள்ளவர்களுக்கு அல்லவென்பது கண்டுகொள்க. ருதுகாலங்களில் நமதுதேசத்து இளம் பெண்கள் அரசு, புளி, மா முதலிய மரநிழல்களில் தங்குவது வழக்கம். இயல்பிலேயே மெலிந்த சரீரமுள்ளவர்களுக்கு ருதுகாலங்களில் சரீரம் மிகவு மெலிந்திருக்கு மாதலால் அப்பொழுது அந்தவியாதி சீக்கிரம் பற்றும். இவ்வியாதி தீர மந்திரங்களும் ஔஷதங்களும் கூறப்பட்டன. மந்திர ஔஷதங்களாலன்றி இவற்றுள் ஒன்றுல் மட்டும் அவ்வியாதியை நிவர்த்திசெய்ய முடியாது. இதுகாறுங் கூறியது ஈண்டைக்குப் பயனில்லாமற்போனுலும், பெண்களுக்கு அவசியங் கூறவேண்டியது. வேறு சந்தர்ப்பம் நேர்வது அருமையாதலால் ஈண்டுச்சிறிது கூறினம். விளக்கு நிழல், மனிதர் நிழல் முதலியவற்றிற்கும் ஓர் வகையான துர்க்குணமுண்டென்றும், மனிதர்கள் அந்நிழல்களில் நெடுநேரம் இருக்கக்கூடா தென்றும், வைத்தியநூல்களும் ஸ்மிருதிகளுங் கூறுகின்றன. நிழல்களுக்கு ஒரு வகைச் சக்தியுண் டென்பதே யீண்டு நாம் முக்கியமாய்க் கொள்ளவேண்டியது.

அச்சத்தியே யீண்டு இராகு கேதுக்களென்று கூறப்படுவதென்றும், அது மஹாசக்தியாதலால் தெய்வமாகவே யுபசரிக்கப் படுமென்பதுங் கொள்க. ஆயின், அதனைப் பாம்பென்று கூறுவதேனெனின், அதுகூறுதும். பூமியோ அல்லது சந்திரனோ சூரியனை மறைக்கும்போது உண்டாகும் நிழல் பாம்பின்வடிவம்போலிருக்கும். எவ்வாறெனின், பூமி, சூரியனுக்கும் சந்திரனுக்கும் மத்தியஸ்தானத்தில் நிற்கும்போது சூரியன் மறைபட நிழலுண்டாகின்றது. எதிலிருந் துண்டாகின்றது? பூமியிலிருந்து. அப்போது பூமியின் மேற்பரப்பும், சற்றேறக்குறைய பக்கங்களும் சூரிய கிரணங்களால் வியாபிக்கப்படும். கீழ்ப்பாகம் வியாபிக்கப் படாமையால் ஆண்டு நிழலுண்டாகும். அதிகநிழல் தோன்றுமிடம் பூமியின் அடிப்பாகமே யாதலால் அவ்விடத்து அது அதிக விசாலமாக இருக்கும். அது பாம்பின் தலைப்பாகம்போலத் தோன்றும். இந்நிழல் அநேக மைல்தூரம் செல்லுமாகையால் மிக நீண்டிருக்கும். தோன்றிய இடத்திலிருந்து செல்லச்செல்ல அது விசாலத்தில் குறுகும். இவ்வாறு குறுகிக்கொண்டே செல்லும்போது, அதன்நுனி எலிவால்போல் அதிக மெல்லிதாகவிருப்பதால் அது பாம்பின் வால்போலத் தோன்றும். உற்றுப் பார்க்கும்போது பூமியின் கிட்ட உள்ளது தலைபோலவும், நடுப்பக்கம் உடல் போலவும், நுனி மிகக் குறுகி வால்போலவுமே காணப்படும். இதனால் அந்நிழலின் உருவத்தை உற்று நோக்குவோமாயின் அது பாம்புபோலவே காணப்படும். இது பற்றியே அந்நிழலைப் பாம்பு என்று கூறுவது. இவ்வாறே சந்திர னிழலுக்குங் கொள்க.

இது நூதன வான சாஸ்திரிகளின் கொள்கையென்று சிலர் கருதக் கூடும். அங்ஙனமன்று; சில தேசத்து வான சாஸ்திரிகள் சூரியன் தந்நிலையில் தானே சுற்றிக்கொண்டே நிற்கிறதென்றும், மற்றைய கிரகங்களெல்லாம் அதைச்சுற்றி ஓடுகின்றனவென்றும்கூறுவார்கள். சிலர் பூமிநிலையாக நிற்கச் சூரிய சந்திராதிகள் அதைச்சுற்றி ஓடுகின்றன வென்றும் கூறுவார்கள். நமது தேசத்தில் இவ்விருவகைக் கொள்கைகளும் உண்டு. முக்கியமாகச் சூரியன் தன்னிலையிற் பிரியாது சுழன்றுகொண்டே நிற்கின்றதென்றும், மற்றைய கிரகங்கள் அதன் வேகத்தால் சுழற்றப்பட்டு அதைச் சூழ்ந்து செல்கின்றன வென்பதுமே கொள்ளப்படும். இது வேத சம்மதமாம். ஒரு அண்டத்திலிருந்து நோக்குவோர் எட்டுச் சூரியனைக்காணலாமென்பதும், அவை ஒன்றைவிட ஒன்று பெரிதா யிருக்குமென்றும், எட்டாவது சூரியன் மஹா பெரிதென்றும் அதனாலேயே மற்றைய சூரியர்கள் சுழற்றப்பட, அவை சுழலும் வேகத்தினால் அவற்றைச் சூழ்ந்திருக்கும் அண்டங்கள் சுழன்று ஓடுமென்றும் கூறப்படுகின்றது. எட்டாவது சூரியன்றான் துருவன் எனப்படுவான் என்பது வேதசம்மதம். அதனாற்றான் துருவன் கையில் சகல அண்டங்களிலுங் கட்டப்பட்ட கயிறுள்ளதென்றும், அக்கயிற்றினால் துருவன் எல்லா அண்டங்களையும் சுழற்றுகிறானென்றும், அப்படிச் சுழற்றுவதினாலேயே வருஷம், மாதம், நாள், பகல், இரவு முதலிய காலபேதங்கள் உண்டாகின்றனவென்றும் புராணங்கள் கூறுகின்றன. அந்தத் துருவனையே கசியப சூரியனென்று நூல்கள் கூறுகின்றன. ஒரு அண்டத்துக்கு எட்டுச் சூரியர் காணப்படுவது போலவே மற்றைய அண்டங்களுக்கும் கொள்ளவேண்டுமென்றும், இங்ஙனமா

யின் கணக்குக் கடங்காத சூரியர்கள் உண்டு என்றும், நூல்கள் கூறுகின்றன. தற்காலத்திலுள்ள சில வானசாஸ்திரிகள் இரண்டு சூரியர்களைக் கண்டதாகக் கூறுவதும் கவனிக்கத்தக்கது. யோகப் பயிற்சியில் முதிர்ந்த நமது முன்னோர்கள் தமது வல்லபத்தால் கண்டறிந்து எட்டுச் சூரியர்களைக் காணலாமென்றூர்கள். இக்காலத்தவர்க்கு அச்சக்தி யின்மையால் இரண்டு சூரியர்களையே கண்டார்கள். நிற்க, இதனால் நாமறிவது யாதெனில், சூரியனைச்சூழ்ந்து பல அண்டங்கள் ஓடிக்கொண்டிருக்கின்றனவென்பதும், அதில் ஒன்றையொன்று மறைக்கும் என்பதுமே. சூரியனைப் பூமியும் சந்திரனும் சுற்றிவருகின்றன என்று கொண்டாலும், பூமியைச் சந்திர சூரியர்கள் சுற்றுகின்றூர்கள் என்று கொண்டாலும் அவைசுழலுங் காலவளவை ஒரே தன்மையாக இருத்தலால் கிரகணகாலங்கள் தவறுமற் குறிப்பிட்டெழுதப் படுகின்றன. எவ்வாறாயினுமாகுக; மேகத்தால் சூரிய சந்திரர்கள் மறைபடுவது போலவே இந்நிழல்களாலும் மறைபடுவதாகவே கருதப்படுதலால் இந்தத் கிரகணகாலத்து நிழலுக்கு விசேஷம் யாது எனின், அது கூறுதும்.

முன்னமேயே சூரிய கிரணங்கள் வெப்ப முடைமையால் விஷத் தன்மையுடையனவென்றும், குளிர்ந்த தன்மையை யுடைய சந்திரன் அமிர்தமயமாமென்றும் கூறினோம். அதை அனுசரித்தே கிரகண பலன் கூறப்படுமென்பது கொள்க. இனிப் பௌர்ணமி யிரவில், சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையில் பூமிசெல்வதனாலேயே சந்திரக்கிரகண முண்டாகிறதென்பது யாவருக்கும் ஒப்பமுடிந்தது. சூரியனுக்கு நடுமத்தியில் பூமியும், அதன்கீழ்ச் சந்திரனும்கூடும்போது சந்திரகிரகண முண்டாகின்றது. பூமிக்கு அதிக சமீபத்தில் சந்திரன் செல்லும்போது அங்கே பூமியின் நிழல் அதிக விசால மிருக்குமாதல், அதைக் கடந்து செல்ல, அதிகநேரம் செல்லும். அப்போதுதான் ஒன்றேமுக்கால், ஒன்றரை முதலிய கிரகண பாகுபாடுகள் கூறப்படுகின்றன. தூரத்தில் நிழல் குறுகியிருக்கு மிடத்தில் செல்லும்போது முக்கால், அரை, கால் என்ற பாகு பாடுகள் கூறப்படுகின்றன.

இனிப் பிரகிருதத்தைக் கவனிப்போம்: பூமியால் சூரியன் மறைபடும்போது சூரிய கிரகண சம்பந்தம் சந்திரனுக்கு இல்லை. சந்திரனுக்கும், பூமிக்கும் மத்தியிலுமில்லை. இல்லாமையால் ஆண்டு விஷசம்பந்தமில்லை. விஷசம்பந்தமில்லாதபோது ஆண்டுள்ளது என்ன? சந்திரனோடு சம்பந்தமான அமிர்தமே. ஆகையால், பூமிக்கும் சந்திரனுக்கும் மத்தியில் அமிர்தமே தங்கியிருக்கின்றது. இந்த அமிர்தமே சகல ஜீவராசிகளுக்கும் சமஸ்த அசரங்களுக்கும் ஆதாரமாயுள்ளது. இக்காலத்தில் சராசரங்கள் யாவும் அமிர்தத்தில் முழுகி அமிர்தமயமாகின்றன. இயல்பிலேயே அமிர்தத்தன்மையுள்ள நீருக்கு இப்போது அதிக சக்தியுண்டாகின்றது. அமிர்தம், பசிதாகங்களை அடக்கும் சக்தியுடையது; விஷங்களை நீக்கும் சக்தியுள்ளது. எல்லாப் பொருள்களையும் பாவனமாக்குந் தன்மையுள்ளது. பசிதாகங்களை நீக்கக் கூடியதானல், அக்காலத்தில் புசித்த பதார்த்தங்கள் ஜீரணமாகாத தன்மை யுடையனவாம். அதனாலேயே கிரகணகாலங்களில் போஜனம் விலக்கப்பட்டது. அப்போது ஜீரணசக்தி குறையு மென்பது முன்னோர்கொண்ட கொள்கை. அதனால் பல வியாதிகள் உண்டாவதற்கு

இடமுண்டு. இது பிரத்தியட்சத்தில் காணப்பட வில்லையே யென்று கேட்பதுகூடாது. ஏனென்றால், கீரைத்தண்டு, வாழைக்காய் முதலிய வற்றை அதிகமாகத் தின்றால் வாயுவுண்டாகுமென்று கூறினால், அது தவறென்று கூறப்படாதவாறுபோலும். மங்கையர் கலவியால் சுகஜன்னி யுண்டாமென்றால், அஃதில்லையென்று மறுக்கப்படாதவாறு போலுமாம். ஏனென்றால், சில சரீரங்களுக்கு ஒன்று மில்லாவிட்டாலும், மற்றவர் களுக்கு அஃதுண்டாவது பிரத்தியட்சமாதலால், மறுக்கப்படாததே. அதுபோலவே, இக்கிரகண புண்ணியகால போஜன விஷயமும் கொள் ளத்தக்கது. விசேஷமாக ஜீரணசக்தி குறைந்துள்ளவர்களுக்கு மிகுந்த கெடுதியைச் செய்யும். (வரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## இந்து பெண்களின் கல்வி க்ஷீணதசை யடைந்திருப்ப தேன்?

எந்நாட்டினும் சிறந்த நம் நாடு பண்டைக்காலந் தொட்டு கல்வி, கைத்தொழில், ஒழுக்கம் முதலியவற்றிற் சிறந்து எக்கண்டத்தாராலும் புகழ்ந்துகொண்டாடிப் போற்றத்தக்க பெருமைவாய்ந்திருந்த தென்பதை யும், தற்போது பிறரால் நம் நாட்டினர் கல்வி, கைத்தொழில், நாகரீகம் முதலியவற்றிற் சிறந்து விளங்க லாயினர் எனவும், பலர் பல வேறுவிதமா கக் கூறக்கேட்டும்—கேட்கவு மிருக்கிறோம். அது எவ்வாறாயினுமாகுக.

நாம் நடுநிலைமை மதியோடு இருதிறத்தினர்கள் கூறும் கூற்றையும் சிறிது யோசித்து, நமது அபிப்பிராயத்தையும் ஒருவாறு கூறுவாம்.

பண்டைக் காலத்திலேயே நம் பெண்மக்கள் கல்விப் பயிற்சிபெற்று போற்றத்தக்க மகாமேதாவிகளான பண்டிதர்களென்று, ஆடவர்களை விடப்பெண்மக்கள் தாழ்வெனச் செப்பும் வஞ்சகமொழிகளைக் கண்டித்து, தம் கல்வித் திறத்தால் மெய்ப்பித்திருக்கிறார்கள்.

இவற்றை ஒன்றிரண்டால் விளக்கிக்காட்டி, மீண்டும் நமது சொற் றொடரினைப் பின்பற்றிச் செல்லுவாம்.

நம் அருந் தமிழ் மூதாட்டியாராகிய ஔவை பிராட்டியார் "நிறை செல்வம் நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்" என்னும் முதுமொழியை மெய் யென்றுணர்ந்து, அவற்றில் இச்சை கொள்ளாது, தம் பசி நேரத்தில் புன்முறுவலுடன் இட்டது கூழேயாயினும் உண்டு பிறர் விரும்பும் வண் ணம் புகழ்ந்து பாடிச்செல்வர்.

கூழுக்கு மனமகிழ்ந்து பாடுகிறாள் ஔவை என்று, பணத்துக் காசைப்பட்டுக் கவிபாடும் கம்பர் ஔவையை அவமானமடையச் செய்ய வேண்டுமெனக்கருதி, ஒரு சமயத்தில் "ஒரு காலடி நாலிலைப் பந்தலடி" என்பதாக இழிவுபடுத்திக் கூற, ஔவையார், கம்பர் கூறியதினும் பன் மடங்கதிகமாக "எட்டேகாலக்ஷணமே" என்பதாக ஆரம்பித்து, "ஆரை யடா சொன்னாயடா" என்று முடிவுபடுத்தி இழிவாகக் கூறியுள்ளதைப் பலரும் நன்குணர்ந் திருப்பீர்கள். மற்றொரு சமயத்தில் புகழேந்தியும்

ஒட்டக் கூத்தரும் அவ் வழியாகச் செல்லப் புகழேந்தியைக்கண்ட ஔவை காலை மடக்கி ஒட்டக் கூத்தரைக்கண்டு காலை நீட்டிய போது, கூத்தர் கோபங் கொண்டு, பெண்ணிற் கிவ்வளவு கர்வமா வெனப் பொருள்பட ஔவை பிராட்டியாரை இழிவு படுத்திப்பாட, அவற்றிற்கும் சளைக்காது மறுப்பாட்டுப்பாடி வென்றாரெனவும்தெரிகிறது. தவிர,இருக்கு வேதத்திற் சில மண்டலங்களிற் கார்க்கி மைத்ரேயி விஸ்வவரை முத லான பெண்மணிகள் தாமாகச் சில சூக்தங்களை இயற்றியுள்ளாரென்ப தும் தர்க்க சாஸ்திரத்தில் தங்கணவரான யாக்ஞவல்கியரெனும் மகா ரிஷியை கார்க்கி மைத்ரேயி இவர்கள் தர்க்கித்து, அவர் தோற்கும்படிச் செய்திருப்பதையும் பலரும் நன்குணர்வீர்கள்.

மேற்கூறிய திருட்டாந்தங்களினால், பண்டைக் காலத்தில் நம் நாடு கல்வி, பெண்கல்வி முதலியவைகளிற் சிறந்து விளங்கினதென்பது நன்கு தெரிகிறது. பின்னர், பேராசையின் மிகுதியாலும், உலக இயற்கை மாறுபாடுகளினாலும், நம் நாடு பல வேறு அரசர்கள் ஆளுகையின் வயப் பட்டு அவ்வப்போது நிகழ்ந்த மாறுபாடுகளினால் நம் நிலை குலைந்து ஒழுக் கங்கெட்டு, நம் பண்டைய நேர்மை பாழாயிற்று.

கடைசியில், நம் நற்காலத்தின்பயனாக காருண்ய மிக்க பிரிட்டிஷ் ஆட்சி கிட்டவே நம்தடுமாற்ற நிலைமை திடநிலைமை அடைந்து அமைதியேற் பட்டது. சிலர் பெண்மக்களுக்குக் கீழ்த்தரக் கல்விமட்டும் போதுமெனப் புகல்கின்றனர். மற்றுஞ் சிலர் உயர்தரக் கல்வியையும் போதிக்க வேண்டு மெனப் புகல்கின்றனர். பெரும்பாலோர் இந்து உபாத்தினிகள் இருக்கப் பட்ட பாடசாலைகளுக்குத்தான் நம் சிறுமிகளை அனுப்பல் வேண்டுமென் கிறார்கள். இத்தகைய அசந்தர்ப்பங்களாலேயே நம் நாட்டுப் பெண்களின் கல்வி குன்றத் தலைப்பட்டது.

ஆகவே, கடைசியாகக் கூறப்பட்டபடி, நம் பெண்களின் பாட சாலைகளில் இந்து உபாத்தினிகளையே அமைத்தல் அத்தியாவசியகமாகு மென்பது அறிவாளிக ளறிந்த உண்மையே.

இந்து உபாத்தினிகள் வெகுசொற்பமே யுள்ளவர்க ளாதலின் இந்து உபாத்தினிகளை அதிகப் படுத்த வேண்டு மென கவர்ன்மெண்டார் அவர் கள் கருதி, இந்துப் பெண்களுக்கு உபகாரச் சம்பளமும், மாணவ உபாத் தினிகளுக்கு அதிகமான உபகாரச் சம்பளமும் கொடுத்துதவி இந்து உபாத்தினிகளை அதிகரித்துக் கொண்டு வருகிறார்கள்.

இனியேனும் நம் நாட்டுப் பெண்கல்வி அபிவிருத்தியடையு மென் றெண்ண யாதொரு ஐயமுமில்லை.

இப்படிப்பட்ட சமயத்தில் சேலநகர பரிபாலன சங்கத்தார் (முனி ஸிபாலிடியார்) தமது ஆதரவின்கீழ் நடைபெற்றுவரும் பெண்கள் பாட சாலைகளில் கிருஸ்தவ உபாத்தினிகளையே அதிகமாகவைத்திருக்கிறார்கள்.

இந்து உபாத்தினிகள் கிடைக்கவில்லை என்று கிருஸ்தவ உபாத்தினி களை வைத்திருக்கிறார்களா? என்பது விளங்கவில்லை.

இந்து உபாத்தினிகள் கிடைத்தாலும்,கிருஸ்தவ உபாத்தினிகளுக்குக் கொடுக்கும் சம்பளத்தைப்போல் ஏன் கொடுக்காம லிருக்கிறார்கள்? கிரு ஸ்தவர்களைமட்டும் எவ்விஷயத்தில் சிறந்தவர்களாக இவர்கள் மதிக்கிறார்

களோ நாமறியோம். இவர்கள் ஆதரவின்கீழ் நடைபெறும் எல்லாப் பாடசாலைகளுக்கும் தலைமை ஆசிரியர்களாக இருப்பவர்கள் அனைவரும் கிருஸ்தவர்களே. ஏன் இந்து பெண்களுக்குத் தலைமை ஆசிரியர் வேலைகளைக் கொடுக்கக்கூடாது? நகரசங்கத்தின் அக்கிராசனாதிபதி அவர்கள் இந்து மதத்தினராயிருந்தும் நமது பெண்மக்களின் மதத்திற்கே இடையூற்றை யுண்டாக்கும் இத்தகைய ஏற்பாடுகளைச் செய்வது இந்துக்களாகிய நம்மவர்களின் மனதைப் புண்படுத்தும் செய்கையே யாகும்.

சேலம் நகரசங்கத்தைச் சேர்ந்த இந்து கனவான்கள் இனியேனும் நம்இந்துப் பெண்கள் மாட்டு இரக்கங்கொண்டு, நம் பெண்களின் கல்வி யபிவிருத்தியடைய இந்து பாடசாலைகளுக்கு இந்து உபாத்தினிகளையே கூடுமானவரை வைக்க முயல்வார்களென்று பிரார்த்திக்கிறேன். மற்றொரு விஷயம்:— மாதாந்திரச் சம்பளம் உபாத்தினிகளுக்கு கொடுக்கும் சமயத்தில் பெண்களை ஆடவர்கள் நிறைந்த உத்தியோகசாலைக்கு வந்து பணம் பெற்றுச் செல்லவேண்டுமென்னும் கட்டளையை யுடனே ஒழிப்பதுதான் நாம் ஹிந்துக்கள் என்பதற்குத் தக்க கௌரவ நடக்கை யாகும்.

ஓம் தத் ஸத்.

ஓர் அனுதாபி.

குறிப்பு:—மாதர்களுக்கும் கல்வி யவசிய மென்பது அறிவாளிகளில் ஒருவரும் மறுக்கமுடியாத விஷயம். அதில் அவர்களுக்கு வேண்டிய கல்வி, தாய்ப்பாஷையில் நன்றாக எழுதப்படிக்கவும், குடும்பப் பாதுகாப்பிற்கு வேண்டிய அவசியமான விஷயங்களையும், தெய்வபக்தி, கற்பிலக்கணம், கணவனிடத்திலும் குடுபத்திலுள்ள மற்றோரிடத்திலும் நடந்து கொள்ள வேண்டிய முறைமை, மக்களை வளர்க்குந் தன்மை முதலியவற்றைப் போதிக்கும் நூல்களைக் கற்றுணர்ந்தால் போதும். இம்மட்டாவது அவசியம் கற்கவேண்டும். இக்கல்வி பிற்காலத்தில் அவர்கள் நமது மதாசார ஒழுக்கங்கள் நீதிகள் முதலியவற்றைப் போதிக்கும் நமது நூல்களைத் தாங்களே வாசித்துணரத் தக்க ஆற்றலை யளிக்கக் கூடிய கல்வியாக இருத்தல் வேண்டும். அவர்கள் நம்து மதநூல்களில் எவ்வளவு கற்றாலும் கற்கலாகும்.

நமது பெண்மக்களுடைய ஆசார ஒழுக்கங்கள் யாவும் மதசம்பந்தமானவை ஆதலின், அவர்கள் நமது மத ஆசிரியர்கள் இடமே கல்விகற்க வேண்டியது அவசியம். ஹிந்துபாலிகைகளை அன்னியமத உபாத்தியாயர் அல்லது உபாத்தினியிடம் கல்விகற்க விடுவது பெருங்கேட்டைவிளைவிக்கு மென்பதில் சந்தேகமேயில்லை. ஹிந்துமத சம்பந்தமான விஷயங்களும், பெண்களுக்கு அவசியம் வேண்டிய இலௌகீக மதாசார விஷயங்களும் நம்பெண்மக்களுக்குக் கட்டாயம் போதிக்கப்படவேண்டும். அவற்றைப் போதிக்காத கல்வி கற்பிப்பதிலும் கல்வி யில்லாமலே இருக்கச் செய்வது நலம். நம்மக்களுக்கு வேண்டிய மேற்கூறப்பட்ட மதாசார ஒழுக்கங்கள், தெய்வபக்தி, கற்பிலக்கணம் முதலியவற்றைக் கற்பிக்க அன்னியமத உபாத்தியாயர் உபாத்தினிகள் எள்ளளவும் அருகரல்லர்.

அந்தோ! சேலம் நகரசங்க அவயவிகள் இவ்விஷயத்தைக்கவனியாது நம்மக்களுடைய க்ஷேமாபிவிர்த்திக்கும், நமது மதாபிவிர்த்திக்கும் இடையூற்றையுண்டாக்கும் நெறியில் நடந்து வருவதையறிய நமதுமனம் சிவந்த

புண்ணில் எரிவேல் பாய்ந்தது போன்ற வேதனை யடைந்தது. கடந்த இரண்டு சஞ்சிகைகளில் கூறப்பட்டிருக்கும் நம்மதத்திற்கு நேரிடக் கூடிய ஆபத்தைப்பற்றி நமது ஹிந்து சகோதர சகோதரிகள் சற்றுகவனிக்க வேண்டுமாய் அவர்களை மிகவும் வேண்டிக் கொள்கிறோம். சேலம் நகர சங்கப் பாடசாலைகளைப் பற்றிய மேற்கண்ட விஷயத்தை யறிந்தால் கால நிலைமையை யுணர்ந்த நம்மவர் அனைவரும் துக்கிப்பார்க ளென்பதில் சற்றும் அய்யமின்றாம்.

அந்தோ! நமது தெய்வீகமதத்தை யடியோடழிக்க அன்னிய மதத்தினர் கங்கணங் கட்டிக்கொண் டிருக்கும் இச் சமயத்தில்கூட நம்மவர் இவ்வாறு நடப்பது, நமது மத அழிவிற்கு நாமே துணைசெய்வ தாகிறது. இதன்றி, நமதுமத உபாத்தினிகளுக்குக் குறைந்த சம்பளங் கொடுப்பதும், அன்னியமத உபாத்தினிகளுக்கு அதிக சம்பளங் கொடுப்பதுமாகிய விஷயம் நீதிக்கும், சமயோசிதத்திற்கும் நேர்மாறான நடக்கையாக விருக்கிறது. கடவுளே! கடவுளே! கலிகாலக் கொடுமையால் நம்மவர்களுக்கு என்ன புத்திமயக்க முண்டாவதெனினும், இத்தகைய விபரீத மதிமயக்கம் கூட உண்டாகுமோ!

சேலம் வாசிகளாகிய நமது மதப்பெரியோரும், சகோதர சகோதரிகளும், நம்மதமும், குலமும், மக்களும் க்ஷேமாபிவிர்த்தி யடையவேண்டுமென்று கருதுவார்களாயின், இப்போது ஒழுகும் நெறியினின்றும் துரிதமாய்த்திரும்பி, நம்மக்களுக்கு நம்மத ஆசிரியர்களைக் கொண்டே நம்மதாசாரக்கல்வியைக் கற்பிக்கத் தொடங்கவேண்டும். தாய்மதமாகிய நம்தெய்வீகமதத்தில் நாம் அன்புவைத்து அதன் அபிவிர்த்திக்குப் பாடுபடாவிட்டால், நம்முன்னோர் கோபத்திற் காளாவோ மன்றோ! நம் ஹிந்து சகோதராகிய சேலம் நகரசங்க அவயவிகளே! ஹிந்துமதப் பெற்றோர்களே! இது விஷயத்தில் உடனே உங்கள் மனதைச் செலுத்துமாறு உங்களை மிகவும் பிரார்த்திக்கிறோம். சிவமாகவும், மாலாகவும், அயனாகவும், அந்தந்த மதந்தினர் தொழும் தெய்வமாகவும், யாவுமாகவும் விளங்கும் சச்சிதானந்தப் பரம்பொருள் நம்மவர் மனதை நேர்வழியிற் றிருப்பி யருள் புரியுமாறு பிரார்த்திக்கிறோம். பத்திரிகாசிரியர்.

---

## மோக்ஷகாலம் மிஞ்சிப்போகிறது! மிக்க அவசியம்!!

நண்பர்களே! இக்காலத்தில் நடக்கும் சில சீர்கேடான விஷயங்களைக் காணும்போது நமது தாய்நாட்டின் க்ஷேமத்தை ஆவலோடு கோரும் ஒவ்வொரு தேசாபிமானியும் மனம்நொந்து உளங்குன்றுவான் என்பதில் சற்றும் ஐயமின்றாம். உலகில் அறிவாளிகள் ஒரு நல்லபயனை யளிக்கும் சமயம் தவறிவிடுவதாயின் மிக்க கஷ்டமெடுத்துக் கொண்டு அவசரப்பட்டு அக்காலம் மிஞ்சிவிடுமுன் அந்த வேலையை நிறைவேற்ற முயல்வார்கள். இக்காலத்திலுள்ள அறிவாளிகளாகிய செல்வவந்தர்களோ, நமது தாய்நாடு கூடிய சீக்கிரத்தில் கொஞ்ச நஞ்சம் எஞ்சியிருக்கும் சீருங்கெட்டு ஆணும் பெண்ணும் குலதர்ம நடக்கையும், ஆசாரமுங்கெட்டு அடியோடு அழிந்து இப்புண்ணியபூமி பாழும்பூமி யாவதற்கு அவசியமான வேலைகளைச் செய்வதில் ஆச்சரியமான சுறுசுறுப்பும், ஊக்கமு முடைய

வர்களா யிருக்கிறார்கள். இப்புண்ணிய புருஷர்கள், இப்பெரும் புண்ணியச் செயலுக்கென்றே திருவவதாரம் செய்தனர்போலும்.

நேற்று (20-9-1920) நாம், டிராம்வண்டியில் ஏறி சூளைமார்க்கமாகச் செல்லும்போது, நம்மருகில் வீற்றிருந்த பெரியோர்கள் இருவர் எதையோ கண்டு மிக்க வியப்போடும், மனத்துயரத்தோடும், அடடா! என்ன ஆச்சரியம்! எவ்வளவு அவசரத்தோடு வேலை நடக்கிறது! பத்து பதின்மூன்று நாட்களுக்குமுன் இந்தவிடம் வெட்டவெளியா யிருந்தது. இதில் ஒரு விறகுத் தொட்டியிருந்ததே. அடடா! மோக்ஷபூமிக்குச் செல்லும் இரயில்வண்டி புறப்படும் வேளை மிஞ்சிவிடுமென்று இவ்வளவு ஜரூராக வேலை நடக்கிறதோ? கடவுளே! கடவுளே! இத்தகைய மதிகேடு கூட நம்மவர்க்கு வருமோ........" என்று பிரலாபித்தார்கள்.

நாம் திடுக்கிட்டு இவர்கள் பார்வைசெல்லும் திக்கை நோக்கினோம். ஆ! உண்மையே; சில தினங்களுக்குமுன் காலியாவிருந்த பூமியில் இப்போது மிக்க அவசரத்தோடு சட்டதிட்டமாக ஒருப் பிரம்மாண்ட நாடகசாலைக்கட்டிடம் கட்டப்பட்டு வருகிறது. "அட! வேடிக்கையாய் நாடகம் பார்ப்பதாலா பிரமாதம் வந்துவிடப்போகிறது! அதற்காகவா இவ்வளவு பிரயாசை யெடுத்துக்கொண்டு எழுதவேண்டும்?" என்று சில நண்பர்கள் கருதலாகும். அந்தோ! அறிவாலூன்றி நோக்கும் அறிவாளிகள், அவ்வாறுகருதார்கள். இந்த நாடகசாலைகளும், பயாஸ்கோப் சாலைகளும் நம் நாட்டிற்குப் பெருந்தீங்குகளை விளைவிக்கக்கூடிய உபகரணங்கள் என்பதில் சற்றும் ஐயமில்லை. மேலும் இவை எத்தகையோர் மனதையும் மயக்கி இழுத்துக் கேடுவிளைவிக்கும் சுபாவ முடையவையாதலின், மற்றவற்றை விட மிகக் கொடியவையாகும். இவை, மனிதனுடைய தேகத்தில் புளகாங்கிதம் உண்டாகுமாறு நாவினால் நக்கி அதன் வழியாகத் தேகத்தில் விஷத்தை யேற்றி அவனைக் கொல்லும் கவயமா (காட்டுப்பசு) போன்றவை யாகும். இவற்றால் நேரிடுங் கெடுதியொன்றல்ல.

மேல் போக்காய்ப் பார்ப்பதற்கு "என்னமோ ஒரு நாள் வேடிக்கை போய்ப்பார்ப்பதில் என்ன பிரமாதம் முழுகிப்போகிறது; இதை யொரு வேலையாக எழுதவேண்டுமா?" என்று தோன்றக்கூடும். அந்தோ! நண்பர்களே! "அளவிற்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷமாம்" என்ற பழமொழிபொய்யோ? நல்லதேயப்படியாயின் தீயது அளவுமீறின் எவ்வளவு தீங்குகளுக்கு வழியுண்டாகு மென்பதைக் கூறவும் வேண்டுமோ? நமது நாட்டில் இந்த நாடகங்கள் அதிகமாக ஏற்பட்டது முதல் அநேகம் குலமாதர்களும், வாலிப ஆடவர்களும் நன்னெறியினின்றும் விலகிச் சீர்கேடடைந்து வருவது அறிவாளிகள் அனைவரும் நன்கறிந்த விஷயமே; இதற்கு அநேக திருட்டாந்தங்களுள. அப்போதைக்கப்போது நடக்கும் சம்பவங்களைப் பற்றி நாம் கேள்விப்பட்டே யிருக்கிறோம்.

புராண சரிதைகள், நீதிக்கதைகள் முதலியவற்றை நாடகத்தில் பார்த்தால் பக்தியுண்டாகும் என்று ஒருவர்கூறினார். இதுபெருந்தவறான அபிப்பிராயமேயாகும். அவர்கள் அங்குக்காட்டப்படும் காட்சியைக்(ஸீன்களைக்) கண்டு ஆனந்திக்கிறார்கள்; அல்லது, டப்பாமுதலிய பாட்டுகளைகேட்டு அவற்றை மனப்பாடம் செய்துகொண்டு சில நாட்கள்வரை நினைத்த போது பாடிக்கொண் டிருக்கிறார்கள்; அவர்களுக்கு நாடகத்தின்மேல்

பக்தியுண்டாகி அடிக்கடி நாடகம் பார்க்கவே போகிறார்கள். கடவுளிடம் பக்தி யுண்டாகி ஆண்டவன் சந்நிதானத்திற்குச் செல்வது கூட எங்கேனு முண்டோ? இவ்வளவேயன்றி நாடகம் பார்ப்பதில் பக்தி யுண்டாகும் என்றுகருதுவது முழுதும் தவறான அபிப்பிராயமே.

இப்போது உணவிற்கு முக்கிய ஆதாரமான அரிசி முதல் எல்லா வஸ்துக்களும் மிக்க அதிக விலைக்கு விற்கும் இக்கொடிய நிலைமையில் ஏழை ஜனங்கள்,மாய்கையாலுண்டாகும் ஆவலையடக்கமுடியாதவர்களாய், இதற்காகப் பணத்தைச் செலவழித்துக் கடன் பட்டு வருந்துகிறார்கள். டிராமா, பயாஸ்கோப் இத்தகைய விஷயங்கள் எத்தகைய மனிதர்களின் மனதையும் மயக்கித் தூண்டத் தக்கவையாகும்; அத்தூண்டுதலைத் தடுக்க முடியாது, கடன் வாங்கியேனும், பணத்தை வீண் விரயம் செய்து துன் புறுகின்றனர். இவ்வழிகளில் வீணாகச்செலவழிக்கப்படுந்தொகை அபார மாக விருக்கிறது; உண்மையில் இவற்றால், மாணவர், மற்ற வாலிபர், சிறு பெண்கள், மாதர், ஏழைகள் இவர்களனைவர்க்கும் உண்டாகும் ஒழுக்கக் கேட்டையும், வீண் செலவையும், இவற்றால் பின்னால்நேரிடத்தக்க துன் பங்களையும் ஒவ்வொன்றாக விவரித்துக்கூறுவதெனின், உண்மையில் இச் சஞ்சிகையில் பாதி இதற்கே போதாது; சற்று சிந்தித்துப்பார்த்தால் அறி வாளிகள் ஒவ்வொருவர் மனதிற்கும் ஏறக்குறைய யாவும் புலப்படலாகும்.

இதனால் நாடகக்காரர் சீவிக்கிறார்களெனலாம்; அவர்கள் நம்மைத் தூஷித்தாலும் தூஷிக்கலாம். மனப்பூர்வமாக பொது ஜனத்தைக் கருதியே யிதை நாம் எழுதுவதால், அத்தகைய தூஷணையை யேனும் பூஷணையையேனும் நாம் இலட்சியம்செய்யோம். பத்துப்பதினைந்துபேர் ஜீவனம் செய்யவும், ஒருவர் செல்வம் பெறவும், பல்லாயிரம் பேர் ஒழுக் கங்கெட்டு, துன்புறுவது எங்கேனும் நீதியாகுமோ?

"பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை"

(பழிபாவங்களை விளைவிக்கும் வழியில பணம் சம்பாதித்து நெய்யும் பாலுமாகப் புசிப்பதைவிட தரித்திரத்தை யனுபவிப்பதே நலம் என்று மேலோர் கருதுவார்கள்) என்று பொய்யாமொழியார் அருளினர்.

மேல் நாட்டார் ஆசாரத்தை ஆவலோடு பின்பற்றும் நம்மவர் பெரும் பாலும் பன்னடையை யொத்து அவர்களிடமுள்ள உயர்ந்த ஆசாரங்களை விட்டுவிட்டு, நமக்குத்தகாதனவற்றையே பின்பற்றுகின்றனர். மேல்நாட் டார் சுயநலத்தை மட்டுமேகருதித் தம் தாய் நாட்டிற்குக் கெடுதியை யுண் டாக்கும் ஒரு காரியத்தைச் செய்யவேமாட்டார்கள்; அப்படிச்செய்வோர் தாய் நாட்டிற்குத் துரோகம் செய்வோரேயாவர். "கிராமரக்ஷணைக்காக ஒரு பிராம்மணனைக்கொல்லலாம்" என்பது ஒருநீதி. இப்படிச்சிலர் ஜீவன த்திற்காக ஒரு நாட்டில் பல்லாயிரம்பேர் துன்பெய்தச்செய்தல் ஐந்தாறு பேரின் க்ஷேமத்திற்காகப் பல்லாயிரம் பேரை யழித்துவிடும் நீதியாக வல்லவோ விருக்கிறது. தினந்தோறும் மாலைப்போதில் இந்நகரிலுள்ள நாடகக்கொட்டகைகள், பயாஸ்கோப் காக்ஷிச்சாலைகள் இவைகளில் நடக் கும் அமக்களத்தைப்பார்த்தால், கடவுளே! கடவுளே! கொஞ்சம் அறி வுடைய எத்தேசாபிமானியின் மனமும் வேதனைப்படும் என்பதில் அய் யமே யில்லை.

குடிகளை யெல்லாவித ஆபத்துகளிலிருந்தும் காப்பாற்ற வேண்டியது வேந்தராகிய தந்தையின்கடமை. குடிகள் நடக்கைகெட்டு, தரித்திர தசையடைந்து துன்புற்றால் அது அரசரைப் பாதிக்காதோ! ஒரு நகரின் நகர சங்கத்தார் (முனிஸிபாலிடியார்) தங்கள் நகர எல்லையில் வாரத்திற்கு ஒரு தடவைக்குமேலோ இரண்டுதடவைகளுக்கு மேலோ நாடகம் நடத்தலாகாதென விதித்து விட்டதாக ஒரு பத்திரிகையில் கண்டோம். இந்தச் சென்னை நகரிலும் நகர சங்கத்தாராவது, துரைத்தனத்தாராவது ஜனங்களின் நன்மையைக்கருதி, இவ்விஷயத்தில் சீக்கிரம் ஒரு தடையேற்படுத்தாவிடின் இதனால் பெருந்துன்பம் நேரிடுமென்பது நிச்சயம். அறிவாளிகள் கவனித்துப்பார்த்தால் அதன் முற்குறிகளை யிப்போதே காணலாம். பெண் பிள்ளைகள் கூட வீடுகளில் டப்பா, தில்லாலே, ஓரடிப்பதம் முதலியவற்றைக் காலடிபோட்டுக் கொண்டே பாடுவதை ஏராளமாகக் காணலாம். மாதர்களும் மற்றவர்களும் நாடக பாத்திரங்களின் தகுதி, திறமை முதலிய வற்றைப் பேசுவதையே முக்கிய பிரசங்கங்களாகக்கொண் டிருக்கிறார்கள். இப்பாதை யெந்த முடிவில் கொண்டுபோய் விடு மென்பதை யறிவாளிகள் சற்று சிந்திக்கப் பிரார்த்திக்கிறோம்.

துரைத்தனத்தார் இதைக்கவனியாது விடினும் நகரசங்க அவயவிகளாகிய நம் தாய்நாட்டு ஆன்றோர்கள், இதில் கவனம் செலுத்தி இதன் உண்மையை யுணர்ந்து, இத்தகைய தீங்கை யொழித்துப் பொது ஜன க்ஷேமத்திற்கு அவசியமான ஏற்பாட்டைச் செய்ய முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டுமாகப் பிரார்த்திக்கிறோம்.

சென்னை,
21—9—1920. } ரத்தியவாக்கு.

---

## ஆங்கிலமும் தமிழும்.

1. பஞ்ச காவியங்களில் முதன்மை பெற்றதும், சங்கநூல்களிலொன்றுமாகிய 'ஜீவக சிந்தாமணி' என்னும் செய்யுட் காவியத்தை, செம்பூர்-வித்வான் ம-ா-ா-ஸ்ரீ வீ. ஆறுமுகஞ் சேர்வையவர்கள் எளிய வசன நடையில் எல்லோரும் படித்தறியுமாறு 'ஜீவகன்' என்னும் பெயருடன் வெளியிட்டிருக்கிறாரென்று கேட்டு சந்தோஷங்கொண்டு, அப்புத்தகத்தை நமது ஆனந்தபோதினி ஆபீசிலிருந்து சில நாளைக்குமுன் வரவழைத்து, ஒரு நாட்காலை சுமார் 9-மணிக்கு நான் அதை வாசித்துக்கொண்டிருந்த சமயம், என்னிடம் ஏதோ காரிய நிமித்தமாக வந்தவரும், S. S. L. C. பரீக்ஷையில் தேர்ச்சியடைந்து, தற்சமயம் உத்தியோகத்திலிருப்பவருமான என் நண்பரொருவர் பார்த்து ஆச்சரியமடைந்து, "இந்த திராவைகளை ஏன் கட்டிக்கொண்டு அழுகிறீர்? ஒரு அரை டஜன் ரயினால்ட்ஸ் நாவல்களை வரவழைத்தாலும் எல்லோரும் படிக்கலாமே"(Why do you bother yourself with these stuffs ? Why not purchase some half a dozen novels of Reynolds which may be useful to one and all ?) என்று அமரிக்கையுடன் வேடிக்கையாகவே தாம்கொண்ட கருத்தை வெளியிட்டதைக் கேட்டு எனக்கு ஆற்றொணாத் துயர முண்டாயிற்று. அந்தோ! முதல் இடை கடைச் சங்கப் புலவர்களாலும், சேர சோழ பாண்டிய மன்னர்களாலும், மற்றோராலும் நன்கு மதிக்கப்பட்டு கொண்டாடப்பெற்ற நம்

தமிழ்ப் பாஷைக்குக் கடைசியில் இக்கதிவர நேர்ந்தது. ஈதல்லவோ காலத்தின் கொடுமை! நம் தமிழ்ப் பாஷைக்கு எக்குறைவினால் இது நேர்ந்தது? இராஜ பாஷையாயும், வயிற்று பாஷையாயுமில்லாத குறையினால் என ஒருவாறு தேர்ந்தேன்.

2. அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்ததும், முப்பாலை நமக்கறவே போதிப்பதுமாகிய தேவர் திருக்குறளுக்குச் சமமான நூல் ஆங்கிலத்திலுண்டா? நாலடியார், நால்வர் தேவாரம், தாயுமானவர், பட்டினத்தடிகள், இவர்கள் பாடியபாடல்கள், ஆழ்வாராதிகளியற்றிய பாசுரங்கள் முதலியவைகளெல்லாம் நமக்கு மெய்ஞ்ஞானத்தைப் போதிக்கவில்லையா? இராமாயணம், பாரதம், பாகவதம், பக்தவிஜயம் முதலிய வசன நூல்கள் நாம் ஈடேறு மார்க்கத்தைக் காண்பிக்கவில்லையா? ஷேக்ஸ்பியர் முதலிய ஆங்கிலக் கவிகளால் இயற்றிய காவியங்களையும், ஸ்காட் முதலியவர்களால் இயற்றிய நாவல்களையும் வாசித்துத் தேர்ந்து சர்வ கலாசாலையில் உயர்தரப் பட்டம் பெற்றதனாலேயே, ஆங்கிலத்தில் பூராவும் கரைகண்டு விட்டதாக எண்ணி, தமிழ் இருக்கும் இடத்தையே திரும்பிப் பாராதவர்களும், தமிழில் இன்ன புத்தகங்கள்தா மிருக்கின்றன, அவற்றில் இன்ன விஷயங்கள்தா மடங்கி யிருக்கின்றனவென்று கண்டறிந்துகொள்ள சிரமப்படாதவர்களுமாகிய நம் தேயத்து ஆங்கிலப்பட்டதாரிகளனேக ரிருக்கின்றார்கள். அவர்கள் தமிழ்ப் புத்தகத்தைக் கையில் தொடக் கூசுகின்றார்கள். இவர்களா நம்தேயத்து நன்மையைக்கோருபவர்கள்? இவர்களால் நம் தமிழ்ப் பாஷை விருத்தி அடையுமா? ஆங்கிலம் கற்றுப் பட்டம் பெற்று உயர்ந்த பதவியிலிருக்கும் ஒருவரை, அவர் சிநேகரொருவர் 'இவர்தானா உமது பிரிய தந்தையார்' என வினவியதற்கு, 'இவர் எனது தூரபந்து' எனத் தன்னையீன்று பாதுகாத்துவந்த தந்தையையே வெறுத்துக் கூறின அறிவிலாக் கோடரிக்காம்பின் நடத்தையை ஒக்குமன்றோ இவர்கள் நடக்கை! இவர் தம்செயல்! ஏதோ வயிற்றுப்பிழைப்பிற்காக வேண்டி நம் ராஜபாஷையாகிய ஆங்கில பாஷையைக் கூடுமானவரை கற்றுத் தேர்ச்சியடைந்து உத்தியோகத்தி லமர்ந்து 'மெயில்' முதலிய ஆங்கிலப் பத்திரிகைகளன்றி, 'சுதேசமித்திரன்' 'ஆனந்தபோதினி' முதலிய தமிழ்ப் பத்திரிகைகளையும், சஞ்சிகைகளையும் ஏறெடுத்துப் பாராமல் 'கண்டதே காக்ஷி, கொண்டதே கோல' மென்பதற்கிணங்க காலங் கழிக்கின்றார்கள். இவர்களுக்குத் தாய் பாஷை எக்கதியாயினென்ன? ஆங்கிலப் பாஷையில் தேர்ச்சியடைந்தவரும், தமிழில் பாண்டித்யமடைந்த காலஞ்சென்ற டாக்டர் ஜீ. யூ. போப் என்ற ஆங்கில வித்வான் நம் தேவர் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து,சீமையில் வாசக சாலைகளிலொன்றில் வைத்திருக்கின்றாரென்பது நம் தமிழின் பெருமையை விளக்கவில்லையா! ஆங்கிலேயரே நம் பாஷையைச் சிறப்பித்திருக்க, தமிழர்களாகிய நாம் என் தமிழ்ப் பாஷையை அலட்சியம் செய்யவேண்டும்? இஃது என்ன அறிவீனம்!

3. காலஞ்சென்ற மிஸ்டர் வீ. கோ. சூரியநாராயண சாஸ்திரியாரவர்கள் சர்வகலாசாலைப் பட்டம்பெற்றவரா யிருந்தும், கிருஸ்துவ கலாசாலையில் தமிழ்ப் போதகாசிரியரா யிருந்திருக்கவில்லையா! மிஸ்டர் செல்வகேசவராய முதலியாரவர்கள், மிஸ்டர் அனவரதவிநாயகம் பிள்ளையவர்

கள் ஆங்கிலப் பயிற்சியும் தேர்ச்சியும் பெற்றிருந்தும், இன்னும் தமிழ்ப் பாஷைக்காக உழைத்து வரவில்லையா! காலஞ்சென்ற மிஸ்டர் டி. இராம கிருஷ்ண பிள்ளையவர்கள், எக்ஸிகியூடிவ் இஞ்சினீயர் மிஸ்டர் மாணிக்க நாயகரவர்கள், காலஞ்சென்ற போஸ்டாபீசு சூபரிண்டண்டு மிஸ்டர் கன கசபை பிள்ளையவர்கள், சர்வகலாசாலைப் பட்டம்பெற்று துரைத்தன உத்தியோகஸ்தர்களா யிருந்தும் தமிழ்ப் பாஷையின் வளர்ச்சிக்காகப் பாடு படவில்லையா! அப்படியிருக்க நாமேன் அலக்ஷியம்செய்யவேண்டும். 'நிறை குடம் நீர்தளும்பலில்', நாம் ஆங்கிலத்திலும் தேர்ச்சிபெறாது, தமிழிலும் தேர்ச்சிபெறாது இரண்டிலும் அரை குறையாகத் தெரிந்த இப்பந்திகளாகி இருதலைக் கொள்ளி யிடர்ப்பட்ட எறும்புபோல் இங்குமங்கும் விழித்து 'காலத்தோடொத்து வாழ்' என்ற முதுமொழிக்கிணங்க ஆங்கிலத்தை விசேடித்து தமிழை அலக்ஷியம் செய்யும் பெருமை ஒருபெருமையாமோ! வெளவால்கதி நமக்கேன்!

4. இந்து சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்யாமலே இந்துமதம் உண்மையான மதமன்று என்ற பொய்யுறுதிகொண்டு, கிறிஸ்துமதமே உண்மை யான மதம்; பக்திமார்க்கத்தைப்போதிக்கும் மதமென்று யாதொரு உணர்ச்சியில்லாமல் பிதற்றும் பேதையரை யொக்குமன்றோ நம்மனோர்கள்ஆங்கிலத்தைச் சிறப்பித்துத் தமிழை இகழ்வது? நாம் நம் மதலைப்பருவத்தில் 'அம்மா' 'அப்பா' என்று எந்தப்பாஷையில் உச்சரிக்கப் பெருமைகொண்டோமோ அந்தப் பாஷையை இடையில் அலட்சியம் செய்வதென்றால் அது இடையிலேவந்து துர்ப்போதனைகளைப் போதித்து தலையணை மந்திரத்தை ஏற்றிய மனையாளின் வார்த்தையைக்கேட்டு, நம்மைப் பத்துமாதம் சுமந்து பெற்றுப் பாராட்டிச் சீராட்டித் தாலாட்டிப் பாலூட்டிக் காப்பாற்றிய தாயைக் கண்டபடி தூஷித்து இகழ்வதற் கொப்பாமன்றோ!

5. நேயர்களே! சுயநலங்கருதாது, யாதொரு ஊதியத்தையும் கவனியாது தமிழின் அபிவிர்த்தியே தன் நோக்கமென்று சுட்டாதுசுட்டிக் குறைந்த சந்தாவிற்கு நமது 'ஆனந்தன்' மாதாமாதம் நம் எல்லோருக்கு முதவிவருகிறான். அதன் பத்திரிகாசிரியரைப் போல், நாமெல்லோரும் ஒருங்குகூடி ஆங்கிலத்தைக் கற்றபோதிலும் நம் தாய்ப் பாஷையாகிய தமிழ்ப்பாஷையை விருத்தி யடையவேண்டி, சிரமப்பட்டு தமிழ் மாதைப் போற்றினாலன்றோ நம் தமிழ் நாடு செழிப்படையும்.

வெ. பா. சுப்புசாமி, பி. ஏ.

குறிப்பு:—நேயர்களே! இராஜ பாஷையாகிய ஆங்கில பாஷையை நம்மவர் கற்பதைப்பற்றி இப்போது நாம் குற்றங்கூறவில்லை. ஹிந்துக்களாகிய நமக்கு ஆன்மார்த்த பலன் முக்கியமானது. அந்த ஆன்மார்த்த நூல்களனைத்தும் நம் தாய்ப்பாஷையில்தான் இருக்கின்றன—வேறு பாஷைகளால் அவற்றிலுள்ள விஷயங்களை விளக்கிக்காட்ட முடியாது. அவ்வாறிருக்க ஹிந்துமதத்திற் பிறந்த ஒருவன் எங்கேனும் தன் தாய்ப் பாஷையை யலட்சியம் செய்வானோ? இத்தகையோர் தம் தாய்ப் பாஷையை இழிவு படுத்தி ஆங்கிலம் கற்றதால்தாங்கள் உயர்ந்த பாஷா நிபுணரெனக் கருதுவது "என் தாய் அவிசாரிதான், நான் பத்தினி" என்பதுபோலன்றோ விருக்கிறது. அத்தகையோர் ஆண்டவனருளுக்குப் பாத்திரராவாரோ நமது நண்பர், 'நிறைகுடம் நீர்தளும்பலில்' என்று

மேலே கூறியதுபோல், அவர்குறித்துள்ள பி.ஏ., யம்.ஏ. பட்டம் பெற்ற மேதாவிகளென்ன, டிப்டி கமிஷனர் ம-া-ா-ஸ்ரீ திவான்பஹதூர் S. பவானந்தம் பிள்ளை யென்ன, இன்னும் அவர்போல் உயர்ந்த பதவியிலுள்ள ஆன்றோர்களென்ன, இவர்களெல்லாம் தங்கள் உத்தியோகத் தொழிலோடு தம் தாய்ப்பாஷையாகிய தமிழின் அபிவிர்த்திக்காக எவ்வளவோ சிரமமெடுத்துக்கொண்டு உழைத்து வருகிறார்கள்— தங்களுக்கு என்று மழியாப் புகழுடம்பைத் தாங்களே சிருட்டித்துக்கொள்கிறார்கள்.

அவ்வாறிருக்க, ஒரு ஆங்கிலவாக்கியத்தைச் சரியாகத் தமிழ்ப்படுத்தவும் தெரியாத அரைகுறை ஆங்கிலங்கற்றவர்களில்பலர், தாய்ப்பாஷையை யலட்சியம் செய்து அவமதிப்பது என்ன துன்மதியாலோ நாமறியோம். நம் சகோதரர்களாகிய இவர்கள் இத்தகைய அழிவிற்கு ஆளாவது மிகவும் துக்கிக்கத்தக்க விஷயமாகும். அந்தோ! இவர்கள் தங்கள் இயற்கை அறிவால் ஆலோசித்துப் பார்க்கலாகாதோ.

இவ்வுலகில், தங்கள் தாய்ப்பாஷையை யலட்சியம் செய்த எந்தச் சாதியாரேனும் க்ஷேமமடைந்த துண்டோ? பிரத்தியட்சத்தில் உலகில் சிறப்புற்றிருக்கும் ஜாதியாரனைவரும் தங்கள் தாய்ப்பாஷையைப் பக்தியோடு போற்றி வழிபடுகிறவர்களல்லவோ? தாய்ப்பாஷையை யலட்சியம் செய்வோன் பெற்றதாய்க்கே துரோகம்செய்பவனல்லவோ? அவனடையும் தண்டனையே யிவனு மடைவானன்றோ. அன்னியபாஷையை யெவ்வளவு கற்றாலும் ஜீவனத்திற்கு மட்டும் அது இவர்களுக்குதவு மன்றி மறுமைப் பயனுக்கு எள்ளளவேனு முதவாதென்று இவர்கள் புத்தியில் புலப்படாததென்னையோ? இவர்கள் புண்ணிய பூமியாகிய இந்நாட்டில், என்று மழிய முடியா உண்மைகளையுடைய சத்தியமதத்திற் பிறந்து, கடைசியில் ஹிந்துக்களுடைய சுபாவத்திற்கு மாறாக ஆன்மார்த்த பலனை யலட்சியம் செய்து, "கண்டதேகாட்சி, கொண்டதே கோலம்" என்னும் உலகாயுதப் படுகுழியில் விழவிரும்புகிறார்களோ? அந்தோ!

பெற்றோர்கள் தம்மக்களுக்கு ஆரம்பத்தில் தாய்ப்பாஷையையும், மதக்கல்வியையும் முன்னாடிக் கற்பித்தால் நமது சந்ததியார் இத்தகைய கேடடையும் பாதையில் பிரவேசிக்க நேரிடாது. பாடசாலைகளிலுள்ள உபாத்திமார்களெல்லாம் சற்றேறக்குறைய ஹிந்துக்களே. இவர்களும் நமதுமதம், தாய்ப்பாஷை, தாய்நாடு இவற்றின் க்ஷேமத்தைக்கருதி, இவ் விஷயத்தில் சற்று முயற்சி யெடுத்துக்கொண்டு நம் மாணவர்களுக்குத் தக்கபோதனையைச் செய்வார்களாயின் இந்த ஆபத்து நம்மக்களையணுகாதென்பது நிச்சயம். கருணாநிதி யருள்புரிவாராக. பத்திரிகாசிரியர்.

---

## தேஜஸ்

1. பூவுலகில் ஒவ்வொரு பொருளும் கடவுளாலே சிருஷ்டிக்கப் படுகிறதென்றும், பரம்பொருளானவர், எங்கும் நிறைந்து ஜோதிமயமாய் வியாபித்திருக்கின்றாரென்பதும், ஒவ்வொரு இடங்களிலும், ஒவ்வொரு அற்புதம் காட்டப்படுகிறதென்றும், அனுபவ மூலமாகவும் ஸாஸ்திர மூலமாகவும் காண்கின்றோம்.

2. எல்லா ஜீவன்களுக்கும் தேஜஸு இருக்கிறது:— கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட எப்பொருளுக்கும் தேஜஸ் என்னும் ஜோதியொன்

றைக் கடவுள் அளித்திருப்பதாகத் தெரிகிறது. அதாவது, ஓர் லாந்தரி னுள்ளிருக்கும் விளக்கின் பிரகாசமானது, லாந்தரைச் சுற்றிலும் அநேக அடிதூரம் பரவி யிருப்பது போலும், அந்த லாந்தரை யெங்குக்கொண்டு போனாலும், அவ்வெளிச்சமும் அந்தலாந்தரையே யனுசரித்துச்செல்வது போலும், இப்புவியில் ஒவ்வொரு பொருளுக்கும், அதன் சக்திக்குத்தக்க வாறு அரையடிதூரமோ, அல்லது முக்காலடி, ஓரடி தூரமோ அப் பொருளி னின்று ஓர் ஜோதி யானது வியாபித் திருக்கின்றது. இம்மானிட தேகத்தினின்றே, இரண்டடிதூரமும், காசி, இராமேஸ்வரம், திருவாரூர், பழனி, மதுரை இவைகள் போன்ற க்ஷேத்திரங்களிலும், மற்றதேவாலயங்களிலும், நல்ல யோகாத்மாக்கள் அடங்கியுள்ள விடங்க ளிலும், 2, 3 மைல் விஸ்தீர்ணங்கூடவும் பரவியிருப்பதாகத் தெரிகிறது.

3. கடவுளால் நமக்கு தேஜஸ் அளிக்கப்படும் விதம்:— கடவுளின் அம்சத்தி னின்றே தேஜஸ் என்னும் ஜோதி ஒவ்வொரு பொருளுக் கும் அளிக்கப்படுகிறது. உதாரணமாக, அநேக பாண்டங்களில் தண்ணீர் விட்டு சூரியகிரகணத்துக்கு நேரேவைத்தால், சூரியனுடைய பிரதிபிம்ப மானது, ஒவ்வொரு பாண்டத்திலுள்ள தண்ணீரிலும் தோன்றுவது போல், நித்தியஜீவனாகிய ஏகஜீவனது அம்ஸத்தினின்றே, இப்பிரபஞ்சத் திலுள்ள சகல ஜீவராசிகளும் உயிர்பெற் றிருக்கின்றன.

4. தேஜஸ் பலவித நிறமாகவிருக்கிறதும், மாறுவதும்:— தேஜஸ் என் னும் ஜோதியானது பல நிறமுடையதாகவிருக்கின்றது. ஒவ்வொருவித மான தொழிலுக்கும், ஒவ்வொருவித நிறமுள்ள தேஜஸாயிருக்கிறது. மனம் மாறுகிறபடி தேஜஸின் நிறமும்மாறும்; எப்படியெனில், சரீரத் தை லாந்தராகவும், மனத்தை மத்தாப்பு வத்தியாகவும், லாந்தரினின்று ஏற்படும் வெளிச்சத்தை தேஜஸ் என்றும் உவமை காட்டலாம்.

ஓர் லாந்தரில் வெள்ளை மத்தாப்பை வைத்துக் கொளுத்தினால், வெளிச்சமும் வெள்ளையாவது போலும், சிவப்பு மத்தாப்புக்கு வெளிச்சம் சிவப்பாகவும், இவ்விதம் நீலம், பச்சை முதலியவைகளைக் கொளுத்தின் அவ்வவ்விதமாகவும் வெளிச்சத்தின் நிறம் மாறிக்கொண்டே வருவதுபோ லும், மானிடர்களின் மனதிற் கோபஞ்சனிக்கின், சரீரத்தைச் சுற்றியுள்ள தேஜஸ் இரத்த நிறமாகவும், வியபசார சங்கல்பத்திற்கு, சம்பாத்தம்பூ வர்ணமாகவும், சுயப்பிரயோஜன சுய லாபங்களுக்கு, நாரத்தம்பழ நிறத் தைப்போலும், தெய்வபக்தியாக மாறினால் கொஞ்சம் நீலவர்ணமாகவும், சர்வ பூதங்களிடத்தும் தயையுண்டாகி யுலக நன்மைக்காக சதா அதே கவலையாயுழைக்கும் இராஜ யோகிகளுக்கு, பளிங்கைப்போல் வெள்ளை நிற தேஜஸாகவும் மாறும்.

5. தேஜஸானது நமது கண்ணுக்குப் புலப்படாது:— தப சிரேஷ் டர்களான இராஜயோகிகளுக்கே தேஜஸ் புலப்படும். நமக்கு அதைப்பார் க்கககூடிய திறமையில்லை. உதாரணமாக, கல்வியில்லாத ஒருவன், ஓர்புத் தகத்தை யெடுத்துப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாலும் புஸ்தகத்தி லுள்ள விஷயமான து அவனுக்கு என்னவிளங்கும்? நிற்க, கண்ணில்லாத ஒருவன் சூரிய வெளிச்சமில்லை யென்றாலும், கண்ணுள்ளோருக்குப் புலப்படாமற் போகுமோ? அதுபோல், நமக்குப் புலப்படாவிடினும், யோகாத்மாக் களுக்குப் புலப்படாமற் போகாது.

6. தேஜஸோடு தேஜஸ் கலப்பது:—ஒரு பொருளிலிருக்கும் தேஜ ஸானது, மற்றொரு பொருளின் தேஜஸுடன் கலக்கும்குணமுள்ளதா

யிருக்கிறது, "உதாரணமாக, வெள்ளை ஜலத்துடன் சிவப்பு ஜலத்தைக் கலந்தால், வெள்ளை கொஞ்சம் சிவப்பாகவும், சிவப்பு கொஞ்சம் வெள்ளையாகவும் மாறுவதுபோல், கோபியானவன் சாந்தனுடைய சமீபத்துக்கு வரவே, கோபியின் கோபதேஜஸ் கொஞ்சம் சாந்த தேஜஸாகவும், சாந்தனின் சாந்ததேஜஸ் கொஞ்சம் கோபதேஜஸாகவும் மாறுகிறது. நமது கண்ணுக்கு முன்னிலையிலேயே ஓர் உதாரணம் காணலாம்; யாதெனில், வெவ்வேறு குணமுடைய இருவர் ஒன்றுகூடி அன்னிய தேஜஸுடன் தங்கள் தேஜஸை கலக்கச் செய்யாமலிருக்கும்பக்ஷத்தில் இருவர் மனமும் ஒன்றுபட்டு விடுகிறது. ஆனதுபற்றியே, சாதுக்களில் இது விஷயம் தெரிந்தவர்கள் துஷ்டர்களைக் கண்டால் தூரவிலகிக் கொள்கிறார்கள். நீசர்களைக் கிட்டவரக் கூடாதென்பது மதனாலேயே யென்று நினைக்கவுமிடமுண்டாகிறது. ஏனெனில், அவர்கள் அசுத்த தேஜஸ், சுத்த தேஜஸுடன் கலந்துவிடுமென்பதே. ஜாக்கிரதையா யிருந்தாலும் எப்படியாவது கொஞ்சமாவது கெட்ட தேஜஸ் கலந்துவிடும். அதைத தவிர்த்துக் கொள்வதற்கு தினம் தேவாலயங்களுக்குப்போய் சுவாமி தரிசனம்செய்ய வேண்டுமென்று பெரியோர்களாலும் ஸாஸ்திர வழியாகவும் சொல்லப்பட்டு வருகிறது.

7. கெட்டதேஜஸைக் கழிந்து சுத்த தேஜஸை கிரகிக்கும் விதம்:— பாப புண்ணிய மென்பதை தேஜஸ் என்றே சொல்லலாம். அதாவது, க்ஷேத்திரங்களுக்குப் போனால், பாபம் தீருமென்று நம்மால் வழங்கப்படுகின்றது; ஸாஸ்திரங்களாலும் சொல்லப்படுகின்றது. நாம் க்ஷேத்திரங்களுக்குச் சென்றால் நம் மனமானது, சாந்தமும், சுறுசுறுப்பும், ஆனந்தகரமும் ஏற்படுவது நமது மனதுக்கே புலப்படும். ஓர் பாண்டத்திலுள்ள அழுக்குநீரைச் சுத்த ஜலமாயுள்ள தடாகத்திற் கொண்டுபோய் அமிழ்த்தி ஊற்றிவிட்டு அத்தடாகத்திலுள்ள சுத்த நீரை மொண்டு கொண்டு வருவதுபோல், நமது அசுத்த தேஜஸை கிரஹித்துக்கொண்டு, அங்குள்ள களங்கமற்ற பரிசுத்த தேஜஸை நாம் பெற்றுக்கொள்கிறோம். களங்கமற்ற பரிசுத்த தேஜஸ் உள்ளவிடத்திலேயே யெப்போதும் வாசம் செய்பவரில் அனேகருக்குக் கோபமும், கெட்ட செய்கையுமிருக்கக் காரணமேனென்றால், அவர்கள் நல்ல ஜலமாயுள்ள தடாகத்தில், அசுத்த ஜலத்தையுடைய ஓர் பாண்டம் மிதந்து கொண்டிருப்பதற் கொப்பானவர்கள்.

8. மனம் போகும்விதம்:— எல்லா ஜீவன்களிலும் மானிட ஜென்மமே, மேம்பாடுடைய தென்பது யாவருமறிந்த விஷயம். ஓர் மரக்கலத்தில் நீராவியந்திரத்தைவைத்துப்பொருத்தி, அதற்குச்சரியான மாலுமியை வைத்து நடத்தாவிட்டால், மரக்கலமானது பாறையிலடிபட்டு நொறுங்கி விடுவதுபோல் நமக்குக் கடவுள் தேகத்தையும் தேஜஸையும் அளித்திருக்கும்போது மனத்தைச் சீர் திருத்தி வையாமல் கெட்ட செய்கையில் மோதச்செய்து இத்தேகத்தைப்பாழாக்கிவிடுகின்றோம். ஆனதுபற்றியே,

"மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்"

என்றும் ஔவை பிராட்டியா ரருளிச்செய்தார்.

9. நம்மனதைச் சீர்திருத்தினால் சுத்ததேஜஸ் பெறலாம். நாமெல்லோரும் மனதைச் சீர்திருத்தி தேஜஸைச் சுத்தம்செய்தால், பூவுலகில் எக்காரியத்தையும் செய்து நற்கதியடையலாம். உதாரணமாக நந்தனார் கடவுளின் தேஜஸோடு கலந்திருப்பதாக நந்தனார் சரித்திரத்திற் காண

லாம். இப்படிப்போல் ஒவ்வொருயோகாத்மாக்களும், நற்கதியடைந்திருப்பதைத் தேவாரம் முதலிய சாஸ்திரங்களிற்காணலாம். ஆனாலும் நாமெல்லோரும் அவ்வளவு மேம்பாடடையத் திறமை யில்லாதவர்களாயினும், ஏதோ கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது மனப் பழக்க சாஸ்திரங்களையும், மற்ற சாஸ்திரங்களையும், நம் மூதாதைகள் அனுசரித்து வந்த நற்பழக்கங்களையும், தினம் தேவாலயம் சென்று சுவாமி தரிசனம் செய்வதையும், இப்படிப்பட்ட நற்செய்கைகளையும் செய்துவரப் பழகினால் நன்மை பெற்று வாழலாமென்பது உண்மை, S. சுப்பராயப் பிள்ளை,

அகளங்கன், நாகபட்டினம் தாலூகா.

குறிப்பு :—இந்தத்தேஜஸ் என்பது ஒருவிதப் பிரகாசமுடைய புகை போன்றது எனலாம். இது மனிதரின் தேகத்தினின்று ஆவிபோல்வெளி வந்து அவர்களைச் சூழ்ந்துக்கொண்டிருக்கும். இது ஞானிகள் கண்களுக்குப் புலப்படும். இது கரங்களிலுள்ள விரல்களின் நுனிகளி லிருந்தும் கபாலத்தின் வழியாகவும் வெளிவரும். இதன் நிறம் மேற்கண்டபடி அவரவர்களின் மனோசுத்தத்திற்குத் தகுந்தமாதிரியாக விருக்கும். மகான்களின் உருவப்படங்களிலும், கடவுளர் உருவப் படங்களிலும் அவர்கள சிரசின்மேல் சோதிப் பிரபைபோல் காட்டப்பட்டிருப்பது இதுவே.

இந்தத்தேஜஸ் அவ்வாறு கரங்களினின்றும் வெளிவருவதால் அது ஒருவர் தொட்டபாத்திரம், ஒருவஸ்து முதலிய எதிலும் படிகிறது. கெட்டவர்களுடைய தேஜஸாயின் அதைத்தொட்ட அன்னியருக்கு அது கெடுதிசெய்யும். அப்படியே அவர்கள் தொட்ட பண்டங்களையுண்டாலும் கெடுதிசெய்யும். இக்காரணங்களால்தான் அன்னியரை முக்கியமாய் அசுத்தமானவர்களைத் தீண்டக்கூடாதென்றும், அவர்கள் தொட்ட வஸ்துக்கள் தீட்டுப்பட்டு போயினவாதலின் அவற்றை யுண்ணலாகாதென்றும் நம்முன்னோர் ஏற்பாடு செய்துள்ளார்கள்.

இத்தேஜஸுகள் சேர்ந்து புகையைப்போல் மேலேகிளம்பும்; ஒரு ஊரிலுள்ளவர்கள் அனைவரின் தேஜஸுகளும் சேர்ந்து மேல் கிளம்பும்போது அதில் பெரும்பாலோரின் மன நிலைமை எவ்வாறு இருக்கிறதோ, அதற்கேற்ற நிறமே விசேஷமாகத் தோன்றும். இதனால் ஒரு ஊரின் ஓரமாகச்செல்லும் ஒரு ஞானி அவ்வூரின்மேலுள்ள தேஜஸின் நிறத்தைக் காண்பதால் அவ்வூராருடைய தன்மையை யுணர்ந்து அங்குள்ளவர்களில் பெரும்பாலோர் நல்லோரென்றறிந்தால் பிட்சைக்கு அங்குச் செல்வதும், அப்படிக்கின்றி அங்குள்ளோர் கெட்டவர்களென்று புலப்படின் ஊருக்குள் செல்லாமற் போவதும் உண்டு.

நைமிசாரணியத்தில் சூதபுராணிகரிடம் இருடிகளனைவரும் சூழ்ந்திருந்தபோது, தெற்கேயிருந்து ஒரு பெருஞ்சோதிப் பிழம்பு விண்ணுலகை நோக்கிச் செல்வதைக்கண்டு, அதிசயமான அச்சோதி யென்னவென்றும், எங்குச் செல்கிறதென்றும் அவ்விருடிகள் சூதமுனிவரைக் கேட்க, சூதர் அதுகைலையை நோக்கிச்செல்லும் சுந்தரமூர்த்திசுவாமிகள் என்று கூறி அவர் திருவவதாரச் சரித்திரத்தை விரித்துரைத்ததாகப் பெரியபுராணம் கூறுவதாலும் இதையுணரலாகும். இந்தத்தேஜஸுக்கு, "ஹியூமன் ஆரா" (Human Aora) என்று ஆங்கிலத்தில் பெயர்—தத்துவஞான சங்கத்தினரால் (Theosophical Society) வெளியிடப்பட்ட ஒரு நூலில் இதைப்பற்றி விரிவாகக் காணலாகும். பத்திரிகாசிரியர்.

## அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்

(117-வது பக்கத்தொடர்ச்சி)

கோமளவல்லி:—அந்தச் சவரனைக் கொடுத்தது நினைப்பிருக்கிறது. இன்னம் அது என்னிடத்திலிருக்கிறது. ஆனால் அதைக் கொடுத்தவன் யாராயிருந்தாலும் அவன் என் தந்தையல்ல.

இரங் :—எதனால் அப்படிக்கூறுகிறாய் ?

கோமள:—"அது எனக்குத்தெரியும். என் தந்தை எனக்கு நினைப்பிருக்கிறது; அவர் என்மேல் எவ்வளவோ அன்புடையவர்; மிக்க நல்லவர். அவரை யெப்போதும் மறக்க மாட்டேன்" என்று கண்களில் நீர் துளித்துக் கொண்டே கூறினாள்.

இரங்கநாதன் சற்றுநேரம் மனங்கலங்கித் தயங்கினான். அதற்குள் கன்னெஞ்சத்தின் குணமும் கெட்ட எண்ணமும் மேலோங்கிவிட்டன.

"சே சே! இந்தக் குழந்தைப்புத்தி யெல்லாம் விட்டுவிடு. நான்றான் உன்தந்தை. உன்னை யழைத்துக்கொண்டு போகவே வந்தேன்; பிறகு வந்து உன்னை அழைத்துப்போய் ஒரு அழகான வீட்டில் வைக்கப்போகிறேன். உனக்கு ஏராளமான பணங்கொடுப்பேன். உன் கட்டளைப்படி வேலை செய்ய அனேகம் வேலைக்காரர்களை யமர்த்திவைப்பேன்" என்றான். இம்மொழிகளைக் கேட்ட கோமளம் சற்றும் அஞ்சாமல் இரண்டடி பின்னிடைந்து மார்க்க பந்துவின் பக்கத்தில் சென்று நின்றுகொண்டு தீர்மானமான குரலாய்,

" நீ என் தந்தை யல்ல. அது உண்மை யென்று உனக்கே தெரியும். நான் உன்னோடுகூட வந்து வசிக்க மாட்டேன். நீ எவ்வளவு பணக்காரனாயிருந்தாலும் சரி, நான் வரமாட்டேன். இதோ இவர் மனைவிதான் என் தாய்; நான் இவர்களிடந்தான் வசிப்பேன்" என்றாள்.

இரங்கநாதன் மிக்க தந்திரமும் சூது வாதுங்கற்ற பரம துஷ்டப் பயல். அப்பெண் உலக அனுபவம் சற்றும் அறியாதவள். அவ்வாறிருந்தும் ஏதோ தெய்வ சம்பவத்தால் "இவன் எவ்வளவு அன்புடையவன் போல் வெளிக்கு நடந்துகொண்டாலும் உள்ளத்தில் இவன் நமது ஜன்மவிரோதி. இதுவரையில் கூட நமக்கு இவன் ஏதோ துன்பம் செய்திருக்கிறான்" என்று அவள் மனதில் உறுதியாய்ப் பட்டுவிட்டது. அவனை முதல் கண்ட போதே அவளுக்கு வெறுப்புண்டாயிற்று. அந்த வெறுப்பு வரவர அதிகமாயிற்றே யொழியச் சற்றும் குறையவேயில்லை.

இரங்கநாதன் முடிக்க நினைத்த காரியத்தை யெளிதில் விட்டு விடுகிறவனல்ல. அன்பாகப்பேசுகிறவன் போல் அபிநயித்து " குழந்தாய் நீ யடியோடு மறந்துவிட்டாய்; நான் உன்தந்தையே. அன்றேல் இவ்வளவுசிரமம் எடுத்துக்கொண்டு நான் உன்னை யழைக்கவேண்டிய காரணமில்லை. உன்தந்தையை மறுதலிக்க உனக்குமனம்வருமென்று நான் நினைக்கவில்லை. நீ வந்து பார்த்தால் என் நடக்கையால் நான் உன் தந்தையா அல்லவா வென்று சீக்கிரத்தில் அறிந்துகொள்வாய்;பிறகு உனக்கு அங்கிருக்கப் பிரியமின்றேல் இந்த விடத்திற்கே வந்து விடு" என்று மிக்க தந்திரமாகக் கூறிக்கொண்டே இருகரங்களையும அகல நீட்டிக்கொண்டு வா வாவென்று அவளருகில் நெருங்கச்சென்றான்.

கோமளம்;—மிக்க பயந்து நடுக்கத்தோடு "போ அப்புறம்" என்று கூறிவிட்டு மார்க்கபந்துவின் கரங்களைப் பற்றிக்கொண்டு "ஓ என் தந்

றைதக்குச் சமதையானவரே! இந்தத் துஷ்டமனிதன் என்னைத் தொடவிடாதே! அய்யோ இவனைக்கண்டாலும் என் உளம் நடுங்குகிறது. நான் இவனை வெறுக்கிறேன்." என்றாள்.

இம்மொழிகளைக்கேட்டதே இரங்கநாதன் அக்கினியைத் தொட்டுவிட்டவன்போல் சட்டென்று பின்னிடைந்து விட்டான். ஆனால் அவன் மனதில் கோபத்தீ சொலித்துக்கொண்டு சுவாலையாகக்கிளம்பியது.

அவன் முகங்கறுத்து "பேஷ்! தாயைப் போலவே யிருக்கிறாள்.'' என்று கூறிப் பிறகு, "சனியன்! இந்தச்சனியன் இப்படியிருந்தால் நமது ஏற்பாடனைத்தும் அடியோடு கெட்டுப் போகுமே, அட அவதியே' என்று தனக்குத் தானே கூறிக்கொண்டு, சற்றுநேரம் நிதானித்துப் பிறகு அடக்கமுடியாத கோபத்தோடு கண்களில் தணல் வீச, "ஏ அதிகப்பிரசங்கிப்பெண்ணே! உனக்கு நல்ல புத்தி வரும்படி கற்பிக்கிறேன். உன்தேகத்திலுள்ள ஒவ்வொரு எலும்பையும் உடைத்து விடுகிறேன்,'' என்று உரக்கக் கூவினான். (தொடரும்)

ஆ. குப்புசாமி முதலியார்.

---

## பொதுசமாசாரங்கள்

### ஓர் அதிசயம்—கல்லினுள் மனிதன்.

"ஹாங்காங்'' என்ற தீவு சீனாவுக்கு அருகில் உள்ளது. இத்தீவில் சிலதினங்கட்குமுன் ஓர் இடத்தில் உருண்டைவடிவான கருங்கற்பாறைக் குவியலினின்று திடீரென மனிதன் குரலொன்று கேட்கவே, அருகில் புல்லறுத்துக்கொண் டிருந்தவர்கள் திப்பிரமைகொண்டு மனங்கலங்கி நாற்புறங்களிலும் பார்த்துப் பிறகு, இச்சப்தம் மனித சப்தமேயெனத் தெளிந்து அவ்விடத்தினின்றும் விரைந்தோடிப் பக்கத்தில் இருந்த "பே வ்யூ" (Bay View) போலீஸ் ஸ்டேஷன் அதிகாரிகளிடம் இவ்வதிசய சம்பவத்தை அறிவித்ததும், தக்ஷணமே ஐரோப்பிய போலீஸ் உத்தியோகஸ்தர்கள் குறித்த இடம்போய்ச் சேர்ந்தனர். இயற்கைக்கு விரோதமான எவ்விஷயங்களையும் எளிதில்நம்புவது அவர்கள் சுபாவமில்லையாதலால், அந்த ஐரோப்பியர்கள் அதிநுட்பமாய் அவ்விடத்தைச் சோதித்தனர். சோதிக்கும்போதே அவர்கள் காதிலும் மனித சப்தம் விழுந்தது. சப்தம் புறப்பட்ட இடத்தை நன்கு பலமுறை கவனித்து அவர்கள் அப்பாறையண்டைபோய் அங்கு தாம்கண்ட ஓர் வெடிப்பின் மூலமாக அதற்குள்ளிருந்த மனிதனின் காசாரீதி அவயவங்களைக்கண்டனர். அவன் ஒருச்சாய்த்துப் படுத்துக்கொண்டு இருந்ததையும், அவ்விடத்தினின்றும் அவன் எழுந்து வரக்கூடாமலிருந்ததையும் நன்கு உணர்ந்தார்கள். சுற்றிலும் பாறையால் நன்கு மூடப்பட்டு குடுக்கைக்குள் இருப்பவன் போன்று அவன் கிடந்தான். ஆயினும் அவன் அதற்குள் நுழைந்து கிடக்க வேறு வழியுளதா என்று நன்காராய்ந்தும் ஏதும் இருந்ததாகத் தெரியவில்லை. பாறை அதிகமாக வெடித்திருந்த பாகம் 6 அங்குல அகலம்கூட வில்லை. அடைப்பட்டவன் சீனாவின் வடபாகத்தில் உள்ளவனும். அவனுக்கு வயது 35 இருக்கும்; நடுத்தர தேகக் கட்டுடையவன். அவன் பாஷை யறிந்தவன். ஒருவன் வந்து அவன் அவ்வாறு சிறையுற்றிருக்கக் காரணம் என்னவென்று கேட்க, அவன் "ஓர் யக்ஷிணி என்னை இங்கு கொண்டுவந்து வைத்திருக்கிறது'' என்றான். இப்பதிலைத் தவிர வேறேதும் அவன்

சொல்லவில்லை. இது தெய்வ சங்கற்பத்தால் நிகழ்ந்ததென மனந்தேறி அவன் எவ்விதமான பயமும் எய்தாதவன் போலவே தோன்றினன். அவனை விடுவிக்க மராமத் இலாகா எஞ்சினீர்களாலும் முடியவில்லை. அவன் எவ்வளவு காலமாக அங்கு இருக்கிறான் என்பதும், பெரிய உருவுடன் அச்சிறிய வாயிலாக எவ்வாறு உட்சென்றான் என்பதும் எவர்க்கும் விடுகதையாகவே இருக்கின்றது. அவனே வாய்திறந்து சொன்னால்தான் உண்மை விளங்கும்போலும். அவனுக்குப் பசிப்பிணியில்லை; வந்தவர்கள் கொடுத்த இரொட்டி முதலியவற்றை அவன் ஏற்றுக்கொள்ளாமல், தன்னை யக்ஷணி நன்கு போஷித்து வருகிறது என்று சொல்லுகிறான். அவன் தலைக்குநேரே சதா ஜலம் சமீபத்திலுள்ள ஓர் ஊற்றினின்றும் கசிந்துகொண்டிருப்பதால் அவனுக்கு நீர் வேட்கையில்லை. திருட்டுத்தனமாக யாரேனும் ஆகாராதிகள் கொண்டுவந்து கொடுக்கிறார்களோ என்று போலீசார் துப்புவைத்து விசாரித்தும் அவ்வாறு செய்ததாகத் தெரியவில்லை. இச்சமாசாரம் அதி தீவிரமாகப் பரவவே, நாலுவிடங்களினின்றும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து இவ்வேடிக்கையைக் கண்டு அதிசயித்தனர். தாம் படித்த அதிவிசித்திரக் கதைகளிலும் அதிவிசித்திரமாகவே இவ்வுண்மைச் சம்பவம் இருப்பதாக ஐரோப்பியர்கள் ஒப்புக்கொண்டனர். அவனைச் சாகாமல் விடுவிப்பது அசாத்தியமென்பது துரைத்தனத்தாரே அங்கீகரித்த விஷயமாகும். ஆயினும் கரி அள்ளிப்போடுவோரும் போலீசார்களும் அப்பாறையை வெகு சிரமப்பட்டுக் கல்லுளி கடப்பாறைகளைக் கொண்டு ஒரு சிறிதும் தகர்க்க முடியவில்லை. இவர்கள் அலுத்துக் கை ஓயவே பீரங்கிப் பட்டாளம் முழு மூச்சாக வேலை செய்து களைத்துத் தம் இருப்பிடஞ் சேர்ந்தது. பிறகு சீனாவிலிருந்து பிரசித்திபெற்ற கல் உடைப்போர்களை வரவழைத்துவேலை செய்யச் சொல்லினர். ஆயினும் அவர்கள் அம்மனிதனுக்குப் பிராணபாயம் நேரிடுமாதலால் தங்களுக்கு வேலைசெய்யச் சம்மதமில்லையென்றும் சொல்லினர். இவர்கள் சொன்ன முகாந்தரம் உண்மையானதன்று. யக்ஷணி வேண்டுமென்றே அவனை அங்குக் கொண்டுவந்து வைத்திருந்தால் அதற்கு விரோதமாக வேலைசெய்யின் தங்களை அது என்ன பாடுபடுத்துமோ என்ற பீதிதான் உண்மைக் காரணமாகும். பிறகு போலீசார் பாறையைச் சுற்றிப் பாரா இருந்தனர். மறுநாள் வெல்லிங்டன் என்ற அமெரிக்க புகைக் கப்பலினின்றும் இறங்கிய கப்பலோட்டிகள் ஐவர் இவ்வதிசயத்தைக் காணவும், கூடுமானால் உதவிசெய்யவும் விரும்பி அங்கு சென்று பாறையை நன்கு பரிசோதித்துக் கல்லின் நீக்குப் போக்கையும் அது நெக்கு விடக்கூடிய இடங்களையும் நன்கு கவனித்தனர். பிறகு அவர்களில் ஒருவன் சம்மட்டியொன்றை யெடுத்துக் குறிப்பிட்ட ஓரிடத்திலும் அதன் போக்குகள்தோறும் அடித்துக்கொண்டே செல்ல, ஏனை நால்வரும் அவன் அடித்த இடங்களில் தாமும் பன்முறை யடித்தனர். அடிக்கவே காரியம் எளிதில் முடிந்தது. பாறை பிளவுபட உள்ளே கிடந்த மனிதன் சிறிது புரண்டு கொடுத்தான். பிறகு ஐவரும் அவனைத் தூக்கி வண்டியிலேற்றித் துரைத்தனத்தார் வைத்தியசாலைக்குக் கொண்டுசென்றனர். நல்லவேளையாய் இவனுக்குப் பிரமாத படுகாயம் ஏதுமில்லை. ஆயினும் ஐயோ! பாவம், அச்சமும், திகிலும் அவனைச் சித்த சுவாதீன மில்லாமற் செய்து விட்டன. என்ன ஆச்சரியம்!

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்

## ரௌத்திரி௵ கார்த்திகைமீ -சாலிவாகனம்1843-கலியுகாதி5022

## பசலி 1329-30—கோல்லம் 1095-96—ஹிஜரி-1338-39

## இங்கிலீஷ் 1920௵ நவம்பர்மீ—டிஸம்பர்மீ

| கார்த்திகை | நவம்பர்மீ | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | செ | சஷ்-60-0 | உரா-43-20 | பி-43சி | அன்னப்பிராசனம் |
| 2 | 17 | பு | சஷ்0-29 | திரு-49-8 | சி-49பி | கெர்ப்பாதானம் |
| 3 | 18 | வி | சப்-4-57 | அவி-54-16 | சி-54ம | கெர்ப்பாதானம் |
| 4 | 19 | வெ | அ-8-48 | சத-58-8 | சி-60 | கணக்கு முடிக்க |
| 5 | 20 | ச | நவ-11-27 | பூட்-60-0 | ம-60 | மந்திரம் ஜபிக்க |
| 6 | 21 | ஞா | தச-13-54 | பூட்-1-5 | சி-1அ | கெர்ப்பாதானம் பும்ஸவ |
| 7 | 22 | தி | ஏ-13-2 | உட்-3-45 | சித்-60 | யந்திரவேலை, பிரயாணம் |
| 8 | 23 | செ | து-11-55 | ரே-4-19 | அசி-60 | பிரயாணம் |
| 9 | 24 | பு | தி-10-41 | அசு-3-33 | ம-3சி | சுபகாரியங்கள் |
| 10 | 25 | வி | ச-6-15 | பர-2-6<br>*கிரு-57-47 | சி-2ம | கிருத்திகை. |
| 11 | 26 | வெ | ○-2-3<br>பிர-55-13 | ரோ-56-30 | ம-56சி | நாற்றுநட |
| 12 | 27 | ச | துவி52-29 | மிரு-52-50 | சித்-60 | கணக்கு ஒப்புக்கொள்ள |
| 13 | 28 | ஞா | திரு-45-51 | திரு-48-41 | சித்-60 | நாற்றிட-கடகம் |
| 14 | 29 | தி | ச-39-54 | புன-44-24 | அ-சி-60 | நருதானியம் |
| 15 | 30 | செ | ப-34-4 | பூச-40-19 | சித்-60 | பிரயாணம் |
| 16 | 1 | பு | சஷ்28-32 | ஆயி-37-32 | சித்-60 | கீதாரம்பம் |
| 17 | 1920௵ டிசம்பர்மீ 2 | வி | சப்-24-27 | மக-33-15 | அசி-60 | தானியங்கொள்ள |
| 18 | 3 | வெ | அஷ்19-0 | பூர-30-41 | சித்-60 | விவாகநிச்சயம் |
| 19 | 4 | சனி | நவ-15-22 | உத்-28-47 | சித்-மர | ... ........... |
| 20 | 5 | ஞா | தச-12-48 | அஸ்-28-4 | அசி-60 | நந்தவனம் வைக்க |
| 21 | 6 | தி | ஏ-11-49 | சித்-28-24 | பி-28-அ | |
| 22 | 7 | செ | து-12-26 | சுவா-30-4 | சி-30-ம | |
| 23 | 8 | பு | தி-12-21 | விசா-32-57 | சி-32அ | |
| 24 | 9 | வி | ச-14-29 | அனு-37-0 | சி-37-பி | |
| 25 | 10 | வெ | அ●18-4 | கேட்-42-5 | ம-42அ | |
| 26 | 11 | சனி | பிர-22-29 | மூல-47-56 | சித்-60 | |
| 27 | 12 | ஞா | து-27-42 | பூரா-54-22 | சி-54அ | |
| 28 | 13 | திங் | தி-32-7 | உரா-60-0 | மர-60 | |
| 29 | 14 | செ | சது-38-28 | உரா-1-2 | பி-1-சி | |

| | | | |
|---|---|---|---|
| | கே | | |
| | 4-மக-செ<br>21-வி-புத<br>21-மக-சுக் | | குரு |
| செ சுக் | சூரி புத | ராகு | சனி |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the "Ananda Bodhini" Press, 15, Venkatesa Maistry Street, Madras.